## பதிப்பாசிரியரின் ஏனைய நூல்கள்

**பதிப்புக்கள்**

முக்கூடற் பள்ளு
கூளப்ப நாயக்கன் காதல்

**கட்டுரைகள்**

யான் பெற்ற இன்பம்
காற்றிலே மிதந்த கவிதை

உ

பெரியவன் கவிராயர்

பாடிய

# திருமலை முருகன் பள்ளு

பதிப்பாசிரியர்

மு. அருணாசலம், எம். ஏ.

சக்தி காரியாலயம்

சென்னை :: மதுரை

# முகவுரை

உம்பர்க்கும் விறல்வச்ர பாணிக்கும் அயனுக்கும்
உள்ளம் தெளிந்து தேற
உம்பர்நா யகனான சிவனுக்கும் அம்மைக்கும்
உள்ளமொடு கண்கள் குளிர
அம்பர்க்கு முதன்மையாம் அவுணர்க்கும் அவுணர்குல
மன்னர்க்கும் உளம்ந டுங்க
வந்துதன் ஞேடுவிளை யாடிடு மகாவீர
வாகுமுதல் வீரர் புகழ
வெம்பொற் கொடுங்காளம் வாயா யிரம்பொழிய
மிகுசேட னொருசாட் டையாய்
மேன்மே லுறச்சுற்றி ஒருசெங் கரங்கொண்டு
மேதினியில் மேரு கிரியாம்
செம்பொற் சிலம்புபம் பரமென்ன ஆட்டினேய்
செங்கீரை யாடி யருளே
திருமலை எனுங்காவி தருமலைக் குமரனே
செங்கீரை யாடி யருளே.

—க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத்தமிழ்

திருமலை முருகன் பள்ளு என்பது, தென்பாண்டி நாட்டிலுள்ள திருமலை* என்ற தலத்திலே கோயில்கொண்டெழுந்தருளியிருக்கும் முருகப்பெருமான்மீது பெரியவன் கவிராயர் பாடியது. இது, கலித்துறை, கலிப்பா, சிந்து முதலிய பலவகைப் பாக்களால் இயன்ற கஅஎ பாடல்களைக் கொண்டது.

இந்நூலின் பெயர் 'திருமலை யதிபர் பள்ளு' எனவும் வழங்குமெனத் தெரிகிறது; 'திருமலையதிபர் பேரில் பள்ளு

* திருமலை என்றவுடனே, திருவேங்கடமாகிய திருப்பதியே யாருக்கும் நினைவு வரும்; ஆனால் இங்கே குறிப்பிடுவது முருகனுக்குரிய புகழ்பெற்றதொரு சிறு தலம்.

முகிந்தது. முற்றும், சிவமயம். இஃது பெரியவன் கவிராயர் அருளியது' என்ற குறிப்புப் பிரதியின் இறுதியில் காணப் படுகிறது.

இவ்வெளியீட்டுக்கு ஆதாரமாயிருந்தது, ஒரே ஒரு காகிதப்பிரதி; இதுவும் மிகமிகப் பிழைபட்டிருந்தது. இத ஞல், பாடல்களின் வடிவத்தைக் கண்டுபிடிக்க எவ்வளவோ இடர்ப்படவேண்டியிருந்தது. வேறு பிரதிகள் கிடைக்கு மாஞல், இதனுள் தெளிவு பெருமலுள்ள சிற்சில இடங்களைத் தெளிவாக்க உதவும்.

இந்நூலை விரைவில் வெளியிடும்படி என்னை ஊக்கியவர் இந்து சமய அறநிலையப் பாதுகாப்புக் கழகக் கமிஷனர் ராவ்பகதூர் சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியாரவர்கள். இந்நூல் முழுவதையும் பார்த்து ஆங்காங்கு பாடல் களின் வடிவத்தையும் பொருளையும் தெளிவாக்கி உதவிய சென்னைப் பல்கலைக்கழகத் தமிழாராய்ச்சித்துறைத் தலைவர் ராவ்சாகிப் ச. வையாபுரிப் பிள்ளையவர்களுக்கு நான் பெரி தும் கடமைப்பட்டிருக்கிறேன்.

திருமாலின் புகழைக் கூறுகின்ற முக்கூடற்பள்ளு என்ற நூலைப் பரிசோதித்து மூன்று ஆண்டுகளுக்கு முன் வெளியிட்டேன். இன்று, திருமால் மருகனும், முத்தமிழால் வைதாரையும் வாழ வைப்போனும் ஆன முருகன் புகழைக் கூறும் இந்நூல் வெளியாகிறது. இதற்குத துணையாயிருந்த முருகப்பெருமானின் திருவடிகளைச் சிந்தித்து வணங்கு கிறேன்.

தியாகராயநகர்,
சுபானு,
பொங்கல் திருநாள்
1944

மு. அருணுசலம்

# நூன்முகம்

க

## பள்ளுப் பாட்டு

**பி**ற்காலத்தில் தமிழ்மொழியில் தோன்றிய புதிய பிரபந்த வகைகளுள் 'பள்ளு'* என்பதும் ஒன்று; இது; பயிர்த்தொழில் செய்து வாழும் ஏழை உழவர்களின் வாழ்க்கையைக் கவிச்சுவை பொருந்தக் கதைபோல அமைத்து, சிந்து விருத்தம் கலிப்பா போன்ற பலவகைப் பாக்களால் கூறுகிறது. (பள் - பள்ளர் சாதி; பள்ளர் வாழ்க்கையைக் கூறுவது பள்ளுப் பாட்டு.)

பழைய இலக்கண நூல் எதுவும் பள்ளுப் பாட்டைக் குறிப்பிடவில்லை. ஆனால், 'நவநீதப் பாட்டியல்'† என்ற பாட்டிலக்கண நூலின் ஏட்டுப்பிரதிகளிற் காணப்பெறும் மிகைச் செய்யுட்களில் 'உழத்திப் பாட்டு' என்ற தலைப்பில் வரும் நான்கு செய்யுட்கள் பள்ளுப் பாட்டின் கதைப் போக்கை உரைக்கின்றன. கி. பி. 1732இல் சதுரகராதி செய்த ஆசிரியர், உழத்திப்பாட்டு என்பதற்கு விளக்கம் கூறும்போது; பின்வருமாறு எழுதுகிறார்:

"கடவுள் வணக்கம், முறையே மூத்த பள்ளி இளைய பள்ளி குடும்பன் வரவோடு அவன் பெருமை கூறல், முறையே

* பள்ளுப் பாட்டின் வரலாற்றையும் அதையொட்டிய வேறு பல செய்திகளையும் 'முக்கூடற் பள்ளு' என்ற நூலின் முன்னுரையிலே விரிவாகக் காணலாம்.

† ராவ்சாகிப் ச. வையாபுரிப் பிள்ளையவர்கள் பதிப்பு, பக்கம் 75.

அவர் வரலாறு, நாட்டு வளன், குயிற்கூக் கேட்டல், மழை வேண்டிக் கடவுட் பரவல், மழைக்குறி யோர்தல், ஆற்றின் வரவு, அதன் சிறப்புக் காண்டல், இவற்றிற்கிடையிடை அகப் பொருட்டுறையுங் கூறிப் பண்ணைத் தலைவன் வரவு, பள்ளிக ளிருவர் முறையீடு, இளையாளை அவன் உரப்பல், பள்ளன் வெளிப்படல், பண்ணைச் செயல் வினவல், அவன் அது கூறல், ஆயரை வருவித்தல், அவர் வரல், அவர் பெருமை கூறல், மூத்த பள்ளி முறையீடு, குடும்பன் கிடையிருந்தான் போல வரல், அவனைத் தொழுவில் மாட்டல், அவன் புலம்பல், மூத்த பள்ளி அடிசிற் கொடுவரல், அவன் அவளோடு கூறல், அவன் அவளை மன்னித்தல் கேட்க வேண்டல், அவள் மறுத்தல், அவன் சூளுறல், அவள் அவனை மீட்கவேண்டிப் பண்ணைத் தலைவனைப் பரவல், விதை முதலிய வளம் கூறல், உழவர் உழல், காளை வெருளல், அது பள்ளனைப் பாய்தல், பள்ளிகள் புலம்பல், அவன் எழுந்து வித்தல், அதைப் பண்ணைத் தலைவற்கு அறிவித்தல், நாற்று நடல், விளைந்த பின் செப்பம் செயல், நெல் அளத்தல், மூத்த பள்ளி முறையீடு, பள்ளிகளுள் ஒருவர்க்கொருவர் ஏசல் என இவ்வுறுப்புக்கள் உறப் பாட்டுடைத் தலைவன் பெருமை ஆங்காங்குத் தோற்றச் சிந்தும் விருத்தமும் விரவி வர இவ்ற்றாற் பாடுவது.''

உழத்திப்பாட்டு என்ற பாட்டு எதுவும் இன்று கிடைக்கவில்லை. இவ்வாசிரியர் கூறும் விவரங்கள் யாவும் முக்கூடற் பள்ளு என்ற பள்ளுப் பிரபந்தத்திலிருந்து தொகுக்கப்பெற்றன என்று தெரிகிறது.

முக்கூடற் பள்ளு தோன்றிய பிறகு அதை யொட்டிப் பல பள்ளுப் பாட்டுக்கள் எழுந்தன. அவற்றுள், திருவாரூர்ப் பள்ளு முதலியன சிவபெருமான்மீது பாடப்பெற்றவை. பருளைப் பள்ளு விநாயகர்மீதும், கண்ணுடையம்மை பள்ளு அம்பிகைமீதும், குருகூர்ப் பள்ளு அடியார்மீதும்,

வடகரைப் பள்ளு முதலியன வள்ளல்கள்மீதும், மாங்கைப் பள்ளு, வைசியப் பள்ளு என்பன முறையே விசுவகர்ம மரபினர்மீதும் வைசிய மரபினர்மீதும் பாடப்பெற்றவை. முருகனைப் போற்ற எழுந்தவை கதிரைமலைப் பள்ளு, வையாபுரிப் பள்ளு என்பன.

உ

## திருமலைப் பள்ளு

இப்பிரபந்தங்களின் வரிசையிலே, திருமலை முருகன் பள்ளு என்பதும் ஒன்று. இதன் பொருளமைதியும் வழக்கம்போல் ஒரு கதையாகவே அமைந்திருக்கிறது. கடவுள் வணக்கமும் அவையடக்கமும் ஆனபிறகு, கதை தொடங்குகிறது. முருகன் பண்ணையிலே திருமலைக்குடும்பன் என்ற பள்ளன் பயிர்த்தொழில் செய்து வருகிறான். அவனுக்கு மனைவியர் இருவர். இருவரும் பள்ளனோடு தோன்றித் தங்கள் குடிப்பெருமையையும் தங்கள் நாட்டு வளத்தையும் கூறுகிறார்கள். பிறகு மழை பெய்யக் கூவுமாறு குயிலை வேண்டிக்கொண்டு கும்மியடிக்கிறார்கள். அதன்பின் மழை வேண்டித் திருமலையிலுள்ள தெய்வங்களுக்கெல்லாம் பூசை போட்டுப் பலிகொடுத்துப் பொங்கலிட்டு மது வைத்துப் படைத்துக் குரவையாடுகிறார்கள். வானத்தில் மழை பெய்வதற்கான அறிகுறிகள் தோன்றுகின்றன. உடனே மழையும் பெய்து, குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய ஐந்து நிலத்திலும் வெள்ளம் பெருகுகிறது. திருமலைக் கருகிலுள்ள அனுமநதியில் வெள்ளம் கரைபுரண்டோடி மீன் வகைகளையும் பலவேறு பொருள்களையும் அடித்துக் கொண்டு போகிறது. முருகன் பண்ணையிலே பயிர்த்தொழிலைக் கவனிக்கும் பண்ணைக்காரன் வருகிறான். திரண்டு

வந்த பள்ளரும் பள்ளியரும் அவனை வணங்குகிறார்கள். பள்ளன் சரிவரப் பயிர்த்தொழில் செய்யவில்லை யென்பதைக் கண்ட பண்ணைக்காரன், மூத்தபள்ளியை அழைத்து விசாரிக்கிறான். தனக்குப் பள்ளன் செய்த கொடுமையையும் இளையவளிடத்தில் மட்டும் அவன் மோகங் கொண்டு திரிவதையும் கூறி அவள் முறையிடுகிறாள். அதன்மேல், பண்ணைக்காரன் இளையவளை யழைத்து விசாரிக்கிறான். இவனை அவன் கோபிப்பதை யறிந்த பள்ளன் மெல்ல வெளி வந்து, ஒழுங்காகப் பயிர்த்தொழில் செய்து வந்தவன்போல, மாட்டு வகையும் நெல் வகையும் ஏர்க்கால் முதலிய கருவி வகையும் சொல்லுகிறான். இவன் சொல்லை நம்பாமல், பண்ணைக்காரன் இவனைக் குட்டையிலிடிக்கிறான். குட்டையிலடித்த பள்ளனை இளையவள் வந்து கண்டு வருந்துகிறாள். பள்ளன் அவளைத் தேற்றியனுப்பிய பின், மூத்தவள் வந்து கண்டு, அவன் செய்த வஞ்சகத்தை யெல்லாம் எடுத்துக் காட்டி இடித்துரைத்துப் பின் சோறு கொடுக்கிறாள். பின்னர் பண்ணைக்காரனைக் கண்டு, தான் பிணையிருப்பதாகச் சொல்லிப் பள்ளனைக் குட்டையினின்றும் விடுவிக்கிறாள். விடுவிக்கப்பட்ட பள்ளன், வயலுக்கு எரு வைத்து நல்ல நாளிலே நாளேரிட்டு உழுதபின் மற்றப் பள்ளர் பள்ளியரை யழைத்துச் சென்று விதைவிதைக்கிறான். விதை முளைத்து நன்றாய் வளர்கிறது. பள்ளர் கூடி நாற்றுப் பறித்துப் பள்ளியரிடம் தர, அவர்கள் திரண்டு வந்து நடவு நடுகிறார்கள். நட்ட நாற்றெல்லாம் நன்றாக விளைகிறது. தெய்வத்தை வாழ்த்தி அறுவடை செய்கிறார்கள். கண்டுமுதலான நெல்லைப் பள்ளன் குடிகளுக்கும் கோயில் வருடப் பூசைக்கும் பிரித்துக் கொடுக்கிறான். தன் பங்கையும் சேர்த்துப் பள்ளன் இளையவளுக்கே கொடுத்து, மூத்தவளுக்குக் கொடாமற் போகவே, அவள்

வந்து சண்டைப் பிடிக்கிறாள். அவளும் இளையவளுமாகச் சிறிது நேரம் ஒருவரையொருவர் ஏசிக்கொண்ட பின், தாமே சமாதானமடைந்து முருகனை வாழ்த்துகிறார்கள்.

இதுவே திருமலைப் பள்ளின் பொருட் சுருக்கம். சதுராகராதியிற் கூறிய பொருளுக்கும் இதற்கும், சில வேறுபாடுகள் உள்ளன. இங்கே கண்ட 'கும்மியடித்தல்' என்ற பகுதி அதிற் கூறப்பெறவில்லை; ஆயர் வந்து உரம் வைத்தல், பள்ளனை மாடு முட்டுதல் என்ற பகுதிகள் இந்நூலில் இல்லை.

௩

## திருமலை வரலாறு

இக்கதைக்கு இடமாயுள்ள திருமலை என்ற தலமானது, திருநெல்வேலி ஜில்லாவில் திருக்குற்றாலத்துக்கருகிலுள்ள பண்புளிப் பட்டணம் (பண்பை) என்ற ஊரிலிருக்கும் சிறு குன்று. (பைம்பொழில் என்ற தொடர் நாளடைவிலே மருவி வந்து பண்புளி என்றாயிற்றெனக் கருதுகிறார்கள்; பசிய பொழில் உடைமையாலே பைம்பொழில்.) இவ்வூரில் ஓர் அழகான சிறு கோயில் இருக்கிறது. சுவாமிக்கு நகரீசர் என்றும் அம்பிகைக்கு அறம் வளர்த்த நாயகி என்றும் பெயர்கள் வழங்குகின்றன. இக்கோயில் பழமையானது. 15, 16ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுக்களை இதிற் காணலாம்.

குன்றின் மேலுள்ளது முருகன் கோயில். காவியஞ்சுனை (பூஞ்சுனை) என்பது இங்குள்ள தீர்த்தங்களுள் முக்கியமானது. இச்சுனையிலே முற்காலத்தில் தினந்தோறும் ஒரு காவிமலர் (குவளை) தோன்றியதாகவும், அம்மலரே முருகனுக்குச் சூட்டப்பெற்று வந்ததாகவும் வரலாறுகள் உள்ளன. இதனால் திருமலைக்குக் காவி மலை, குவளை வெற்பு, உற்பலாசயிலம் என்ற பெயர்கள் வழங்கும்.

வல்லபை கணபதி கோயில், இடும்பன் கோயில், கறுப்பன் கோயில், மணிகண்டன் சாத்தா கோயில், வைரவன் கோயில், சுனையையடுத்துள்ள சத்த கன்னியர் கோயில் என்பன இங்குள்ள முக்கியமான பிற சுற்றுக் கோயில்கள்.

மலைமேலுள்ள முருகனுக்குத் திருமலைக் குமாரசுவாமி, திருமலையாண்டவன், திருமலை வேலன் என்ற பெயர்கள் வழங்கும். உற்சவ மூர்த்திக்கு முத்தையன், சண்முகன் என்ற பெயர்கள் வழங்கும். அகத்திய முனிவர், சத்த கன்னியர் முதலியோர் இங்கு வழிபட்டுப் பேறு பெற்றவர்கள்.

### தல சம்பந்தமான நூல்கள்

இத்தல சம்பந்தமாகத் தமிழிலே பல பிரபந்தங்கள் உள்ளன. அருணகிரிநாதர் பல திருப்புகழ்ப் பாக்கள் பாடியிருக்கிறார். திருமலை முருகன் பிள்ளைத்தமிழ் என்பது, செங்கோட்டை கவிராச பண்டாரத்தையா பாடியது; சுவை மிகுந்தது. திருமலையாண்டவர் குறவஞ்சி என்பது மற்றொரு பிரபந்தம்; ஆசிரியர் பெயர் தெரியவில்லை. திருமலை நொண்டி நாடகம் மன்னர் பெருமாள் புலவர் பாடியது. இங்குள்ள கறுப்பன் என்ற தெய்வத்தின்மீது பாடப்பெற்றது, திருமலைக் கறுப்பன் காதல்; ஆசிரியர் பெயர் தெரியவில்லை. திருமலைக் கலம்பகம், அந்தாதி, வெண்பா, ஆனந்தக் களிப்பு என்ற பிரபந்தங்களும் இருந்தனவென்பது மேற்கூறிய நொண்டி நாடகத்தால் தெரியவருகிறது; இவை கிடைக்கவில்லை. நகரம் சங்கரபாண்டியும் பிள்ளை பாடிய திருமலைக் குமாரசுவாமி திருப்புகழ், முருகதாசக் கவிராயர் பாடிய தல புராணம், முருகனந்தாதி, குமரன் திருப்புகழ், குமரன் பதிகம், குமரன் வண்ணம், குமரன் சிங்காரச் சிந்து, வெள்ளைச்சாமிப் பாவலர் பாடிய குமரன் அருட்பா, வன்னியப்பப்

பிள்ளை பாடிய தாலாட்டு, குவளைமாலை முதலியன சமீப காலத்தில் தோன்றிய பிரபந்தங்கள்.*

சு

## ஆசிரியர் வரலாறு

இந்நூலைப் பாடிய ஆசிரியர் பெயர் பெரியவன் கவிராயர் † என்பது. இவரைப்பற்றிய வரலாறு வேறெதுவும் புலப்படவில்லை. இந்நூலைப் பார்க்குமிடத்து, இவர் சிறந்த சைவ சீலரென்பதும், சைவ சித்தாந்தத்திலே தோய்ந்தவர் என்பதும், முருகப்பெருமான் திருவடியிலே இடையறாத பக்தியுடையவரென்பதும், அரிய கவித்திறமை பெற்றவரென்பதும் விளங்குகின்றன. 'பெரியவன் கவிராயர் அருளியது' என்று பிரதியில் காணப்படும் குறிப்பானது, இக்கவிஞருடைய பாடல்களிலே பின் வந்தோருக்கு எவ்வளவு ஈடுபாடு இருந்தது என்பதைப் புலப்படுத்துகிறது.

ரு

## நூல் செய்த காலம்

ஆசிரியரைக் குறித்த செய்திகள் புலப்படாவிடினும், அவர் காலத்தை அறிவதற்கு இந்நூலகத்தே ஒரு குறிப்புக் காணப்படுகிறது. திருமலை முருகன் ஆலயமானது நெடுங்

---

* திரு. பஞ்சநதம் பிள்ளையவர்கள் எழுதிய 'திருமலைக் கோயில் வரலாறு' பார்க்க.

† கி. பி. 1628-ல் பழனித் தலபுராணம் பாடிய பாலசுப்பிரமணியக் கவிராயரின் தந்தையார் மற்றொரு பெரியவன் கவிராயர்; அவரினும் இவர் வேறுவர்.

காலமாக வடகரை என்ற சொக்கம்பட்டிச் சமீன்தார்களின் ஆதிக்கத்திலேயே இருந்து வந்தது. சமீன்தார்கள் திருமலை முருகனையே குலதெய்வமாகக் கொண்டிருந்தார்கள். சமீன்தாரைப் புகழ்ந்த பிரபந்தங்கள் யாவும் திருமலையையும் புகழ்வது வழக்கமாயிருந்தது.

**திருமலையாண் டவர்தமக்குத் தினபூசை யொடுதேரும்**
**திருநாளும் நடக்கவே கூவாய் குயிலே**

என்பது வடகரைப் பள்ளில் வருகின்ற ஒரு பாடல்.

வடகரைச் சமீன்தார்களுள், சிவராம சின்னணைஞ்சாத் தேவர் என்பவர் காலத்தில்தான் திருமலை முருகன் கோயிலுக்குப் பல திருப்பணிகள் செய்யப்பெற்றன என்று வடகரைச் சரித்திரம் கூறுகிறது. திருமலையிலே திருப்பணிகள் செய்யப் பெற்றதையும், சின்னணைஞ்சாத்தேவர் சமீன் பட்டத்திலிருந்ததையும் திருமலைப்பள்ளிற் கண்ட இரண்டு பாடல்கள் நிகழ் காலத்தில் குறிப்பிடுகின்றன :

**மேன்மேலும் திருப்பணியும் திருப்பணிசெய் அடியவரும்**
**மிகவூழி வாழியெனக் கூவாய் குயிலே! (உக)**

**நீதிபரன் சின்னணைஞ்ச பெருமாள்உச் சிதவானும்**
**நீள்நிதியும் கருவூலப் பொருளும் - குயிலே**
**கோதிலாச் செங்கோலும் ஆதினமும் சந்தானக்**
**குமரர்களும் தழைக்கவே கூவாய் குயிலே! (உசு)**

என்பன அப்பாடல்கள். 'திருப்பணி செய் அடியவர் வாழி' என்றதாலும், 'சின்னணைஞ்ச பெருமாள் செங்கோல் தழைக்க' என்றதாலும், ஆசிரியர் காலத்தே திருப்பணிகள் நடைபெற்றன என்பதும் சின்னணைஞ்சாத் தேவர் செங்கோல் செலுத்தினர் என்பதும் விளங்குகின்றன. தேவர் பட்டத்தில்

இருந்த காலம் கி. பி. 1729-1731. ஆகவே, இக்காலமே திருமலைப் பள்ளு பாடப்பெற்ற காலம். எனவே இந்நூலின் காலம் உத்தேசம் கி. பி. 1730 என்றும், பெரியவன் கவிராயர் காலம் பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பாதி என்றும் தெரிய வருகின்றன.

சுா

## நூலாராய்ச்சி

மூக்கூடற் பள்ளில் பயின்றுள்ள செய்யுட்கள், கலிப்பா, சிந்து என்னுமிரண்டே; ஆனால், இந்நூலில் இதன் ஆசிரியர் பலவகையான பாக்களையும் பாவினங்களையும் கையாளுகிறார். கலிப்பா, கலித்துறை, கீர்த்தனம் (பல்லவி, அனுபல்லவி, சரணம் என்ற மூன்றுறுப்புங் கொண்டது), கும்மி, சந்த விருத்தம், சிந்து, விருத்தம் (அறுசீர், எண்சீர், கலிவிருத்தம் என்பன), வெண்பா என்பவற்றை இங்குக் காணலாம். அவையடக்கங் கூறும் பாடலை அழகான திருப்புகழ்ச் சந்தக் குழிப்பொன்றில் அமைத்திருக்கிறார் (ச).

பள்ளியர் இருவரில் மூத்தவள் திருமலையைச் சேர்ந்தவள், இளையவள் குற்றாலத்துக்குரியவள்; எனவே, ஆங்காங்கே ஆசிரியர் குற்றாலத்தையும் குற்றால நாதரையும், குழல்வாய் மொழியம்மையையும், குற்றாலத் தல விருட்சமான குறும்பலாவையும் போற்றுகிறார். இவர் குறிப்பிடும் பிற சிவ தலங்களாவன: ஆரூர், கயிலை, சங்கரன்கோயில், சிரபுரம், மதுரை. ஞானசம்பந்தரைப் பலவிடங்களில் சிறப்பிக்கிறார்.

முருகன் பெருமையைக் கூறுமுகத்தால் அவன் வீற்றிருக்கும் தலங்கள் சிலவற்றைக் குறிப்பிடுகிறார். அவை

யாவன : ஆவினன்குடி, இடைகழி, இலஞ்சி, ஏரகம், கந்தமா தனம், செந்தூர், சோலைமலை, தணிகை, பரங்கிரி.

மாலை யிரத்தல், வண்டுவிடு தூது என்ற துறைகள்பற் றிய அகப் பொருட்சுவை யமைந்த இரண்டு பாடல்களை ஆசி ரியர் இதனுள் அமைத்திருக்கிறார். தோத்திரப் பாடலாக இதனுள் அமைந்தவை கசு ; இவை யாவும் மிக்க கவிச்சுவை பொருந்தியவை. ஆசிரியருடைய புலமையையும் பக்திப் பெருக்கையும் அழகாக உணர்த்துகின்றன. 'காவித் திருமலைச் சண்முக நாயகன் கால் பிடித்துப் - பாவித்திரு மலை யாமல் நெஞ்சே' (கஙO) என்பதுபோன்ற உபதேசங்களை எடுத்துக் காட்டாகக் கூறலாம்.

பள்ளுப் பாட்டின் கதைப் போக்கிலே இவர் எடுத்தா ளும் உவமைகள் யாவும் முருகனைப்பற்றிய செய்திகளும் சம் பந்தரைப்பற்றிய செய்திகளுமாகவே இருக்கும். அனுமநதி யில் வந்த மீன்களெல்லாம், வைகையில் அமணர் சம்பந்த ரோடு வாது செய்து இட்ட ஏடுகள் ஆற்றோடு அடித்துச் செல்லப்பட்டமைபோலப் போயினவாம் ; சம்பந்தர் விட்ட ஏடு எதிரேறிச் சென்றதுபோல, கடல் மீன்கள் அனும நதி யில் எதிர்த்து வந்தன என்பார். ஆற்று வெள்ளம் வந்த அழகு மிக்க காட்சி, மதுரையில் மாணிக்கவாசகருக்காகச் சோமசுந்தரக் கடவுள் குதிரை கொணர்ந்து பாண்டியன்முன் நடத்திக் காட்டியதுபோல இருந்ததாம் (கூரு). மீன்களை அடித்துச் சென்ற நதியின் வேகம், 'நறவு கமழுங் குவளைக் குன்றுறை நாயகன் மயில் வேகம்போல்' இருந்ததாம் (கூகூ). பண்ணைக்காரன் பள்ளனைக் குட்டையிலடித்துப் பின் விடு வித்த செயல், 'மறையிட்ட வேதனை நக்கீரனைத் திருமாமலை யான் சிறையிட்டு விட்ட செயல் அல்லவோ?' என்பார் (கஉகூ).

ஆசிரியர் சமய உணர்ச்சியில் தோய்ந்து, சைவ சித்தாந்தக் கருத்துக்களையும் மிக்க நயம்பட உவமையாக எடுத்தாளுகிறார். குமாரக் கடவுள் குருவடிவாய் உலகத்தில் வந்து ஞானோபதேசம் செய்யவே, பாசங்களெல்லாம் நீங்கும்; அருள் தோன்றவே, சிவமுளை முளைக்கும்; வயலிலே நாற்றுக்கள் முளைத்தெழுந்தமை இதைப்போல இருந்தது என்கிறார் (கச0). பின்னும், ஒரே பொருளாகிய முருகன் உலகத்திலே பல பொருளாய் விரிந்திடும் முறைமை போல, நாற்றும் ஈரிலை மூவிலை கொண்டு பல கிளைகளாக வளர்ந்தது என்கிறார் (கசக). ஆறுமுகக்குரு வந்து, மனமாகிய நிலத்திலே சஞ்சிதக் காடாகிய களையைக் களைந்து, அருள் நிறைந்த ஞானமென்னும் ஏரைப் பூட்டி, அஞ்ஞானம் அகலும்படியாக அருட்கொழுக்கொண்டு உழுது, ஆனந்தமாகிய நீரைப்பாய்ச்சி, சிவமாகிய விதையை விதைத்தால், சிவானுபூதி என்ற பயிர் விளைவதுபோல, நாற்றெல்லாம் விளைந்தது என்கிறார் (கருக).

திருக்குறளையும் திருக்குறட் கருத்தையும் எடுத்தாளுகிறார். 'அச்சமே கீழ்ச்சாதிக் காசாரம் என்பார்கள் ஆருமே' (க0௩) என்பதில் 'அச்சமே கீழ்களது ஆசாரம்' என்ற திருக்குறளையும், 'வாளெடுத் தோங்கிப் பின் புறங்கொண்டு வீசி மருட்டுவ தல்லது' (கஉரு : ச) என்பதில் 'கடிதோச்சி மெல்ல எறிக' என்ற திருக்குறட் கருத்தையும் காணலாம்.

பழமொழிகளை மிகுதியாக இவர் கையாளுகிறார். இவற்றை நூலின் இறுதியில் காணலாம் (பக்கம் கஉ0).

உலக இயல்பை ஆங்காங்கு இவர் உணர்த்திச் செல்கின்ற முறை மிக்க நயமுடையதா யிருக்கிறது. பள்ளர் போன்ற எளிய மக்கள் வாழ்க்கையிலே, குடியைப் பற்றிச் சொல்லாமல் இருக்கமுடியாது. மிதமிஞ்சிக் குடித்துவிட்ட

வீரக் குடும்பனென்ற பள்ளனொருவன் செய்கிற அறிவற்ற செயல்களைச் சுவைபட எடுத்துக் காட்டுகிறார் :

அறிவழிந்திடக் குடித்திடும்
அரக்குச் சேட்டையும் குரக்குச் சேட்டையில்
அதிகம் பாரடி பள்ளீரே ! (௲௫௩)

அரக்குக்களைக் குடித்ததனாலுண்டான சேட்டை குரங்கின் சேட்டையினும் அதிகமாயிருக்கிறதாம். இதேபோல, உலகத்திலே மன்மதன் செய்கின்ற சேட்டையை யார்தாம் கண்டறிய முடியும், பள்ளர் பள்ளியருக் கிடையிலுள்ள காதலின் இன்பத்தை யார்தாம் உணரமுடியும் என்கிறார் :

கட்டி வெல்லமும் பாலும்போல் இவர்
இட்டம் ஆருக்கும் தெரியுமோ
காமன் சேட்டையை உலகிலே எவர்
காண வல்லவர் பள்ளீரே ! (௧௫௦)

இவ்வாறெல்லாம் ஆசிரியர் உலக இயல்பிற் பல சாயலகளை நமக்குக் காட்டும்போதே, தம்முடைய உண்மையான உள்ளப்பாங்கையும் அருமையாகச் சில இடங்களில் உணர்த்தி விடுகிறார். தம்மை, முருகன் தனக்கு அடியானென்றே வளர்த்து வருவதாகக் கூறுகிறார் :

அயிலேறிய கரத்தனை, எனை அவன்
அடியான்என வளர்த்திடும் ஒருவனை (௪)

என்பார் ; பாட்டின் சந்தமே அவர் உள்ளத்தின் எக்களிப்பை உணர்த்துகிறது. முருகன் தம் உள்ளத்தில் உறைவதோடு அமையாது, தம் நாவினும் குடியாக எப்போதுமிருந்து தம்மைப் பாடச் சொல்லுகிறான் என்று அவர் மீண்டும்

கூறுகின்ற இடத்திலே அவருடைய பக்திப் பெருக்கையும் தொண்டின் உறைப்பையும் காண்கிறோம் :

ஆவினன்குடி திருப்பரங் கிரியும், என்
நாவினும்குடி யிருப்பென இருப்பவன்,
அலையிட்ட துரும்பாய் மெலிஅமரரை
நிலையிட்ட பெருமான் (உ)

என்பார். கடைசியாக, நம் வினையைப் போக்கவும் நம்மைக் காத்தருளவும், முருகனுடைய மயிலும் வேலும் திருவடித் துணையும் உள்ளனவென்று அவர் கூறும்போது, திருமலையைத் தேடிச்சென்று தொழுது வலம் வரவே நாம் சித்தமாய் விடுகிறோம் :

விடங்கள் மாற்றிட மயிலுண்டு, வேலுண்டு
வினைப்பகை தனைத்தீர்க்க,
சடங்க ளெய்திடா தாண்டிடத் திருத்தண்டைத்
தாட்டுணை நமக்குண்டே. (அசு)

ஆம், தண்டையணிந்த அத்திருவடிகள் நிச்சயமாக நமக்கும் துணை செய்யும்.

எளிய உழவர் வாழ்க்கையைக் காட்டவந்த இச்சிறு நூல், கவிச் சுவையையும் இறைவன் திருவடி நேயத்தையும் எளிதிலே பெருக்கவல்லது என்பதில் ஐயமில்லை.

---

# பொருளடக்கம்

உ

திருச்சிற்றம்பலம்

# திருமலை முருகன் பள்ளு

---

## காப்பு

### கலித்துறை

குடவா ரணச்செங்கை யம்மான் மருகன் குகன்குமரன்
திடவா ரணக்கொடிச் செவ்வேள் திருமலைச் சேவகன்சீர்
படவா ரணம்பகர் வாயானைப் பாடிய பள்ளிசைக்கே
கடவா ரணமுகக் கட்டிவி நாயகன் காப்பென்றுமே.

---

**காப்பு.** குட வாரணம் - வளைந்த சங்கு ; சங்காயுதம். அம்மான் மருகன் : அம் மால் மருகன் என்றும், அம்மான் (மாமன், மான்) மருகன் என்றும் கொள்க. திடவாரணக் கொடி - வலிமை பொருந்திய கோழிக்கொடி. செவ்வேள் - முருகன். திருமலை என்பது முருகனுக்குரிய மலைக்கோயில் ; திருநெல்வேலி ஜில்லாவில் திருக்குற்றாலத்துக் கருகிலுள்ளது. சேவகன் - வீரன் ; முருகனுக்குரிய சிறப்புப் பெயர். 'கடற் செந்தில் மேவிய சேவகனே' - கந்தரலங்காரம். சீர்பட ஆரணம் பகர் வாயான் : ஆரணம் - வேதம். சேவகனாகிய வாயான் என்று கூட்டுக.

---

பள்ளிசை - பள்ளுப் பிரபந்தம்; இதைப் பள்ளிசை என்பது மரபு; 'மாலழகர் பள்ளிசை' என்பது முக்கூடற் பள்ளின் காப்பு; 'திருமலையான் பள்ளிசை' என்று பின்னரும் இந்நூலிற் கூறுவர் (செய்யுள் க, உ). பாடலுக் குரியதாகை யால் 'பள்ளிசை', 'இசைத் தமிழ்' (ரு) எனவும், ஆடலுக் குரிதாகையால் 'பள் ளூவகைத் தமிழ்' எனவும் இதைச் சொல்வதுண்டு.

கட வாரண முகம் - மதம் பொருந்திய யானை முகம். கட்டி விநாயகன்: இத்தலத்திலுள்ள விநாயகர் திருநாமம் உச்சிக் கணபதி என்பது.

சேவகன், வாயானைப் பாடிய பள்ளிசைக்கு விநாயகன் காப்பு என்று முடிக்க.

இப்பாடல் திரிபில் அமைந்திருக்கிறது.

காப்புப் பாடலின் பின், 'அத்திமுகத் - துத்தமனை - நித்தம் நினை - சித்தமே', 'ஐந்துகரச் - சிந்துரனை - வந்தனைசெய் - சிந்தையே' என்ற பாடல்கள் பிரதியில் காணப்படுகின்றன.

---

# கடவுள் வணக்கம்

## விநாயகர்

### சிந்து

பார்தந்த பன்னிரு கரப்பிரமன்
போர்தந்த கன்னல்விற் புயச்சிரமன்
பரித்தருள் ஆரணச் சரவணத்தான்
திருச்சர வணத்தான்
பேர்தந்தெனை யினங்கரு மலையான்
பிணைதந்தபெண் புணர்திரு மலையான்
பீடுயர் தமிழ்ப்பள் ளிசைச்சிறியேன்
பாடவந் துதவும் :
சீர்தந்திலர் முனமவந்து தோன்றுன்
ஏர்தந்திடும் நயனங்கள் மூன்றுன்
செவிசேர் சுளகெனப் படைத்தான்
குடவயி றழகெனப் புடைத்தான்

---

க. பன்னிருகரப் பிரமன் : முருகன்; பிரணவப் பொருள் கூற அறியாது விழித்த நான்குமுகப் பிரமனைச் சிறையிலிட்டு, தானே பார படைக்குந் தொழிலை முருகன் மேற்கொண்டா ருதலால், 'பார்தந்த பன்னிரு கரப்பிரமன்' என்றுர். போர் தந்த - போர் தொடுத்து அம்பு எய்த. கன்னல் வில் - கரும்பு வில். சிரமன் - அற்பன், இழிவானவன் ; மன்மதன். பரித்து அருள் - மன்மதனை (அழித்துப் பிறகு இரதிவேண்ட மீண்டும் படைத்துக்) காத்து அருள் செய்த. ஆரணச் சர வணத்தான் - வேதமாகிய மாலையை யணிந்த திருமேனியுடையவன் ; சிவ பெருமான் ; அவன் தந்த. திருச் சரவணத்தான் - சரவணப் பொய்கையி லுதித்த முருகன். இனம் கரு மலையான் - இன் னும் பிறப்பை எண்ணி அஞ்சும்படி செய்யான். பிணை தந்த பெண் - மான் மகளான வள்ளி நாயகி. பீடு - பெருமை. சீர் தந்திலர் - புகழைப் பாடாதவர்கள். ஏர் - அழகு. நயனம் - கண். சுளகு - முறம் ; முறம்போன்ற காது. புடைத்தான் - பருத்தவன்.

வார்தந்ததோர் தவளக்கொம் புடையான்
வலபையென்றொரு பவளக்கொம் புடையான்
மதத்தாரைகள் பொழிகவுட் கரிமுகன்
பதத்தா மரையே.

## குற்றால நாதர்

ஆவினன்குடி திருப்பரங் கிரியும்என்
நாவினுங்குடி யிருப்பென இருப்பவன்
அலையிட்ட துரும்பாய்மெலி அமரரை
நிலையிட்ட பெருமான்
நாவலன்சிர புரக்கவு ணியன்குல
காவலன்புகழ் குறும்பல வுறைவோன்
நம்மை யிங்காண் டருள்குழல் வாய்மொழி
யம்மை பங்காளன்

---

௧. வார் தந்த - நீண்ட. தவளக் கொம்பு - வெண்மையான தந்தம். வலபை - வல்லபை; விநாயகருடைய சக்தி; வல்லபை கணபதி என்பது, இவ்வூர் விநாயக மூர்த்தங்களுள் ஒன்று; இதன் கோயில் மலையடிவாரத்தில் இருக்கிறது. பவளக் கொம்பு - சிவந்த கொடிபோல்வாள். கவுள் - கன்னம். கரிமுகன் - யானைமுகனான விநாயகன்.

சிறியேன், திருமலையான் பள்ளிசை பாட, கரிமுகன் பதத்தாமரை வந்துதவும் என்க.

௨. திருமலைக்கருகிலுள்ள சிறந்த சிவதலம் குற்றாலமாதலினாலே, குற்றாலநாதருக்கும் இங்கு வணக்கங் கூறுகிறார்.

ஆவினன்குடி - பழனி. நாவினுங் குடியிருப்பு - நாவிலேயிருந்து பாடச் செய்கிறான் என்பது கருத்து. சிரபுரக் கவுணியன் குல காவலன் - சீர்காழியிலே அந்தணர் குலத்தில் கவுணிய கோத்திரத்திலே உதித்த திருஞானசம்பந்தர். புகழ் குறும்பலா: குறும்பலா குற்றாலத்துக்குரிய தல விருட்சம்; திருஞானசம்பந்தரால் ஒரு தனிப் பதிகம் பாடப்பெற்ற அருஞ்சிறப்புடையது. உறைவோன் - அதன் நீழலில் உறையும் குற்றால நாதன். குழல்வாய் மொழி யம்மை - குற்றாலத்தில் அம்பிகையின் திருப்பெயர். சலந்தரனைப்

கோவலன்படு கேவலந் தவிர்ந்திடுங்
கோமலரணி பூமல ரெனுந்தமிழ்க்
    கும்ப சம்பவன் பணிதிரி கூடாசல
    நம்பன் அம்பதமே
தேவி யஞ்சிட வேங்கைய ளுகிய
காவி யஞ்சுனைக் காங்கெயன் திருமலைச்
    செவ்வேளிசை பள்ளிசை காத்திடும்
    எவ்வேளை யுமே. உ

## திருமால் முதலியோர்

கூந்தலம்பிடி காந்தனைக் கள்வனைக்
குருநாதனை யருமா தவர்க்கொரு
    கோனுகிய நிதியைவிண் ணவர்பணி
    சேனு பதியைச்

---

பிளந்த சக்கரத்தைச் சிவபெருமானிடம் பெற வேண்டித் திருமால் ஆயிரந் தாமரைப் பூவால் சிவனை வழிபட்டபோது, ஒரு பூக் குறைய, உடனே தங்கண்ணிலொன்றை இடந்து இட்டது கண்டு சிவபெருமான் அவருக்கு அருளினுர் என்பது புராணக் கதை. இதை இங்குக் குறிப்பிடுகிருர். கோவலன் - கோபாலனுன திருமால். கேவலம் - துன்பம். கோ மலர் - கண்ணுகிய மலர். பூ மலர் - தாமரை. பூ மலர் எனும் திரிகூடாசல நம்பன், கும்பசம்பவன் பணி திரிகூடாசல நம்பன் என்க. கும்ப சம்பவன் - குடத்திலே பிறந்த அகத்திய முனிவன்; 'கும்பசம்பவன் வந்துபதந் துதிசெய்யும்' - திருமலையாண்டவர் குறவஞ்சி கஅ. திரிகூடாசல நம்பன் - குற்ருலநாதன். அம் பதம் - அழகிய திருவடி. தேவி - வள்ளிநாயகி. வேங்கையன் - வேங்கைமரமானவன். காவி - குவளை மலர்; குவளை மலை என்பது திருமலைக்குரிய பெயர். காவியஞ்சுனை அல்லது பூஞ்சுனை என்பது இத்தலத்துத தீர்த்தங்களுள் ஒன்று. காங்கெயன் - கங்கையில் உதித்தவனுன முருகன்.

நம்பன் பதம், பள்ளிசை எவ்வேளையும் காத்திடும் என முடிக்க.

௩. கூந்தலம் பிடி - கழுத்து மயிருடைய யானை (நைடதம் கசுசு). பிடி காந்தன் - தெய்வயானையின் காதலன்.

சேந்தனை வள்ளி காந்தனை மேனைக்குத்
திருப்பேரனைத் திருமலை வீரனைத்
திசைத்த லந்தனில் வழுத்திடு மினியபள்
ளிசைத்தமிழ் புரப்பார்
பாந்தளிற்றுயில் நாதனும் அவனுந்திப்
பூந்தடத்துறை வேதனும் அவன்அனை
பாரியுத்தமி காளியும் வாணியும்
வீரபத் திரனும்
காந்தளங் கரத்தெழு நாரியரும் மின்
னேந்திய பன்னிரு சூரியரும் மைக்
கடல்மீளியும சாத்தனுங் கற்பகக்
கா வாளியுமே. ௩

---

சேந்தன் - முருகன். மேனை - இமயராசன் மனைவி, தவஞ் செய்து பார்வதியை மகளாகப் பெற்றவள்; ஆகவே முருகன் மேனைக்குப் பேரன். வழுத்திடும் - பாடிய. புரப்பார் - காப்பு ஆவார். பாந்தள் - பாம்பு; நாதன் - திருமால். உந்திப் பூந்தடம் - உந்தித் தாமரை. வேதன் - பிரமன். அவன் அனை - பிரமன் அனனையாகிய இலக்குமியும். பாரி - பெரிய. அவன் அனையும் பாரியுத்தமியான காளியும் என்க. வாணி - சரசுவதி. காந்தள் அம் கரத்து எழு நாரியர் - காந்தள் மலர் போன்ற கைவிரலுடைய சப்தகன்னியர்: இவர்கள் சிலைகளைப் பூஞ்சுனையின் மேற்புறத்திலே காணலாம். பன்னிரு சூரியர் - துவாதசாதித்தர். மைக்கடல் மீளி - கருங்கடலுக்குரிய வருணன். கறபகக் கா ஆளி: காவுக்குத் தலைவனான இந்திரன்.

இப்பாடலில் காப்புக் கூறப்பட்டோர் அனைவருக்கும் காப்புக் கூறுவது, பிள்ளைத்தமிழுக்குரிய மரபு. பள்ளுப் பாட்டிலே இவ்வாசிரியர் அவர்களுக்கு இவ்வாறு வணக்கங் கூறுவது புதுமை.

# அவையடக்கம்

## சந்தவிருத்தம்

அயிலேறிய கரத்தனை எனையவன்
அடியானென வளர்த்திடும் ஒருவனை
அழகாலுயர் குறக்கொடி கணவனை
- அமர்மீதே

மயிலேறிய சமர்த்தனை அயனொடு
சிவனார்பணி குருக்களை உயர்திரு
மலைவேலனை வழுத்துபள் ளிசையெனும்
- முறையாலே

வியனோசைகள் எழுத்தசை அடிதொடை
தடுமாறினும் வழுப்பல புணரினும்
வினைவேறுற இலக்கணம் வழுவினும்
- அறியேன்நான்

இயலோடிசை படித்திடு புலவர்கள்
வழுவாமென மறுக்கிலர் பதரொடும்
இனிதாகநெல் விலைப்படு மெனும்வகை
- அறிவாரே. ௨

---

௨. இச்சந்த விருத்தம், 'தனதானன தனத்தன தனதன ......தனதானா' என்ற குறிப்புடையது. அயில் - வேல். கரத்தன் - கையுடைய முருகன். குறக்கொடி - வள்ளியம்மை. அயன் - பிரமன். குருக்கள் - உபதேசம் செய்த ஆசாரியன். வழுத்து - துதிக்கின்ற. வியன் - பெருமையுடைய. ஓசை, எழுத்து, அசை, அடி, தொடை - செய்யுளுறுப்புக்கள். வழு - குற்றம். புணரினும் - பொருந்தினாலும். இயலோடிசை - முத்தமிழில் இருபகுதிகளாகிய இயலும் இசையும்.

# நூல்

## மூத்த பள்ளி வரவு

### கலிப்பா

சித்தசனன் மைத்துனவேள் தெய்வவள்ளி காதலனுங்
கத்தனெனை யாண்டருளுங் காவித் திருமலையான்
கொத்தடிமைப் பள்ளர் குலவிளக்காங் கும்பமுலை
மூத்தநகைச் செங்கனிவாய் மூத்தபள்ளி தோன்றினளே. ரு

### சிந்து

குழல்மணங் கமழ்நறுமலர்த் தோப்போ
பளபளென்றபித் தளைவளைக் காப்போ
குருக்க ணத்திருமாப்போ முறுவல்செய்
முருக்கிதழ்ச் சேப்போ

---

ரு. சித்தசன் - மன்மதன். மைத்துன வேள் - முருக வேள். மன்மதனும் வள்ளியம்மையும் திருமாலுக்கு மகனும் மகளும் ஆவர். கத்தன் - கர்த்தன். கொத்தடிமை - குல முழுதும் அடிமையாக உள்ளவர்.

இப்பாடலுக்கும் பின்வரும் கலிப்பாக்கள் அனைத்திற்கும் பிரதியில் 'இன்னிசை' என்ற தலைப்புக் கொடுக்கப்பட்டுள்ளது. இனிய இசை பயின்றமையால் இப்பெயர் வந்ததாகலாம்; அல்லது இன்னிசை வெண்பா என மயங்கி, ஏடெழுதியவர் இந்தத் தலைப்புக் கொடுததாரென்றும் கருத இடமுண்டு.

சா. தோப்பு - மரங்களடர்ந்த சோலை. குருக்கணத்து இறுமாப்போ என்க; குருக்கணம் - முலை; 'தங்கிய குருக் கணம்..., இங்கிவை மாதர் முலையென விளம்புவர்' என்பது

மழலையம் பசுங்கிளிமொழிப் பேச்சோ
அழகொழுகிய மஞ்சணைப் பூச்சோ
வண்ணக் கொங்கைகண் டிடைகுடி போச்சோ
என்னக்கை வீச்சோ
பழியெதிர் கொண்ட பொங்க லாய்ப்போ
இளையபள் ளியைப் பார்க்குங்க லாய்ப்போ
பள்ளத்தி யிவ ளல்லவே இளைஞர்கள்
உள்ளத்தி எனவே
முழுவெனும்புயக் குழகன்நந் திருமலை
முத்தையன் பண்ணைக் குடும்பனுக் கன்புள்ள
முதற்குடியாள் பண்பையிற் பள்ளத்தி
முனந்தோன் றினளே. கூ

---

திவாகரம்; குருத்தெழுந்து கண் பெற்றதால் இப்பெயர் வந்ததுபோலும். முருக்கிதழ் - முருக்கம் பூப்போற் சிவந்த இதழ். சேப்போ - சிவப்போ. மஞ்சணைப் பூச்சு : சில மகளிர் கழுத்திலே பூசிக்கொள்ளும் எண்ணெய்க் குங்குமம்; 'நெற்றி யிலிடும் மஞ்சணைப் பொட்டும்' என்பது முக்கூடற்பள்ளு, கூ௭ வண்ணக் கொங்கை கண்டு - அழகிய தனத்தின் பருமை யைக் கண்டு. பொங்கலாய்ப்பு: உள்ளக் கொந்தளிப்பு; (கலாய்ப்பு - கோபித்தல் : 'கலாய்த்தொலைப் பருகுவார் போல் கன்னியர் துவன்றினரே' - சிந்தாமணி, ககூ௫அ.) உள்ளத்தி - உள்ளத்திலே இருப்பவள். குழகன் - முருகக் கடவுளுக்குரிய சிறப்புப் பெயர்; 'குழகன் கங்கை மைந்தன் குன் றெறிந்தோன், ...இனைய அறுமுகக் கடவுள் பெயரே'- பிங்கலந்தை, ககo. குடும்பன் - பள்ளர் தலைவன். பண்பை யிற் பள்ளத்தி : மூத்த பள்ளி இந்த நகரில் வந்தவளென்றும், இளையவள் நன்னகரில் (குற்றாலத்தில்) தோன்றியவள் என் றும் ஆசிரியர் அமைத்துக் கொள்கிறார். பண்பை - திருமலைக் குரியதொரு பெயர்; பண்புளிப் பட்டணம் என இப்போது வழங்குகிறது. பைம்பொழில் அல்லது பண்பொழில் பட்ட ணம் என்பது இப்பெயரின் பழைய வடிவமென்று சொல்வர்.

## இளைய பள்ளி வரவு

### கலிப்பா

வள்ளிகண வன்காவி வாவித் திருமலைவாழ்
அள்ளிலைவேல் எந்தைபண்ணைக் கன்பாங் குடும்பனுக்கே
தெள்ளியமோ கங்கொடுக்குந் தென்னா ரியநாட்டுப்
பள்ளிஇளை யாளழகைப் பார்த்தாற் பசிபோமே. எ

### சிந்து

தொண்டிக்கள் ளுண்ட சண்டையுஞ் செருக்கும்
கெண்டைக் கண்துயில் கொண்டையுஞ் சொருக்கும்
துலுக்குடன் முலை குலுக்கிய நடையும்
தலைப்பணி யுடையும்

---

இங்குள்ள நகரீசுரமுடையார் கோயில் திருமலையைச் சேர்ந்த சுற்றுக் கோயில்களுள் ஒன்று. திருமலையும் பண்ணையும் ஒன்றென்ற முறையிலேயே ஆசிரியர் கதையை நடத்திச் செல்லுகிறார். பண்பை நகரீசர் கோயில், திருமலை முருகன் தேவஸ்தானத்துக்கு உட்பட்டது. முனம் - முன்னதாக.

எ. அள் இலை வேல் - கூர்மையான இலைபோன்ற முகத்தையுடைய வேல். தென்னாரிய நாடு : தென்னாரி நாடு; திருமலை (அதாவது பணபொழில பட்டணம்) அமைந்த நாடு வடவாரி நாடெனறும், குற்றாலம் அமைந்த நாடு தென்னாரி நாடென்றும் பெயர் பெறும். மூத்தவள் திருமலைப் பள்ளி; இளையவள் குற்றாலத்துப் பள்ளி; எனவே இவள் தென்னாரி நாட்டுப் பள்ளி என்று சொல்லப்பெறுகிறாள். 'திருக்குற்றாலர்தென் னாரிய நாடே' என்பது குற்றாலக் குறவஞ்சி.

அ. 'தொண்டிக்கள்-நெல்லாலாக்கின கள்' : சிந்தாமணி கஉ௩௩, உரை. கெண்டைக் கண் - கெண்டை மீனையொத்த

தண்டிப் பெண்களுக் கிவள் துரைப் பெண்ணெனும்
நன்றிக் கென்றிடும் மொழியிசைப் பண்ணெனும்
சமத்தி கட்கடைச் சிமிட்டுமற் றெவரையும்
அட்டிடும் மட்டும்
கண்டச் சங்கிலி வடத்தொடு குடத்தனம்
மிண்டிக் கொண்டிசைந் தசைவது மதர்த்தெழு
கதக்களிற் றினைச்செழுங் கமுகிடைச் சேர்த்திடுங்
காட்சியும் இலங்க
எண்டிக் கும்பணி திருமலைக் காங்கெயன்
பண்பைப் பண்ணைக்கு வாய்த்திடும் பள்ளனுக்
கினிய நன்னகர்ப் பள்ளத்தியெனும்
இளையாள் தோன்றினளே. அ

## பள்ளன் வரவு

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

முருகவிழுங் குழல்மடவார் ஆறு பேர்கள்
முலைத்தலையிற் பீரொழுகிச் சுரக்கும் பாலைப்
பருகுதிரு மலைக்குமர நாதன் பண்பைப்
பண்ணைவளம் பயிரேற்றித் தொழும்பு செய்யும்

---

கண். துலுக்கு - அசைத்தல். தண்டி - சண்டி. கன்று இக்கு என்றிடும் மொழி - முதிர்ந்த கரும்பு என்னத்தக்க இனிய மொழி. கன்றுதல் - முதிர்தல். இந்த மொழி இசைப்பண் எனத் தக்கதாம். சமத்தி - சமர்த்தி. கட்கடைச் சிமிட்டு - கடைக்கண் சிமிட்டுதல். அட்டிடும் மட்டும் - வருத்துகின்ற பெருமிதமும். குடத்தனம் - குடம்போன்ற தனம். மதர்த்து - செழித்து. கதக் களிறு - கோபங்கொண்ட யானை. எண் திக்கும் - எட்டுத் திசையும். நன்னகர் - திருக்குற்றாலத்துக்கு வழங்கும் பெயர்களுள் ஒன்று.

க. முருகு - நறுமணம். குழல் மடவார் - கூந்தலையுடைய பெண்கள். ஆறு பேர்கள் - கார்த்திகைப் பெண்கள் அறுவர். தொழும்பு - அடிமைத் தொழில்.

பெருகுதன மூத்தபள்ளி இளையாள் என்னும்
பிடியானை யிரண்டும்இரு மருங்கு சூழத்
திருகுசின மதயானை போலு லாவிச்
செய்யதிரு மலைக்குடும்பன் தோன்றி னானே. கூ

## சிந்து

பச்சைநிசார் தொட்டுக் கருங்
கச்சைகட்டிப் பின்னே நாலப்
படுக்குங் கொடுக்கும் விட்டுப்
பக்கந் தன்னிலே
உச்சிதமாய் வாங்கு சேர்த்துக்
குச்சுவிட்ட பொன்னுரு மால்
ஒய்யாரமாய்க் கட்டித்தடி
கையாற் சுழற்றி
மிச்சமாய்க் கொட்டுமண் வெட்டி
வச்ரமணித் தோளில் வைத்து
வீசுகெந்தப் பொடி பூசி
மீசை முறுக்கிச்
செச்சையணி ஆறு முகச்
சேவகன்பேர் பெற்ற வெற்றித்
திருமலைக் குடும்பன் வந்து
தோன்றி னானே. க௦

---

கூ. பிடியானை - பெண் யானை. மருங்கு - பக்கத்தில்.

க௦. நிசார் - கால்சட்டை ; 'தயங்கு நிசார் தொட்டிறுக்கி' : கூளப்ப நாயக்கன் காதல். நாலப் படுக்கும் - தொங்கவிட்ட. கொடுக்கு - ஆடையிலே கட்டிவிடுந் தொங்கல். வாங்கு - பிச்சுவா என்னும் ஆயுதம. குச்சுவிட்ட - குஞ்சங் கட்டிய. செச்சை - வெட்சி மலர் ; முருகனுக்கு உவந்த

## பள்ளன் தன் பெருமை கூறுதல்

காவி யொன்று மூல மின்றி
வாவி யினுட் கண்டு தொழார்
கையை மண்வெட் டிக்குப் போடுங்
கையாய்ப் பிடிப்பேன்
ஆவ லாய்முத் தையன் கோயில்
மேவி வலம் வாரார் காலை
அட்ட காச மாய்ஏர்க் காலாய்க்
கட்டி யுழுவேன்
நாவி னுற்பன் னிரு செங்கைக்
கோவை வழுத் தாத பேர்கள்
நாக்கை யுழுங் கொண்டிக் கொழு
ஆக்கிக் கொள்ளுவேன்

---

மலர்களிலொன்று ; 'செச்சைக் கண்ணியன்' - முருகாற்றுப்படை, உ0அ ; 'வெட்சி புனையும் வேளே போற்றி' - கந்தர் சட்டி. கவசம். சேவகன் பேர்பெற்ற குடும்பன் : பள்ளுப் பிரபந்தத்தின் கதாநாயகனான பள்ளன், பாட்டுடைத் தலைவன் பெயரையோ ஊர்ப் பெயரையோ சார்த்தி வழங்கப் பெறுதல் மரபு ; இந்நூலில் அவன் திருமலைப் பள்ளன் அல்லது திருமலைக் குடும்பன் என்று சொல்லப் பெறுகிறான்.

கக. இங்குள்ள பூஞ்சுனையிலே முற்காலத்தில் பெருமான் அருளால் தினந்தோறும் ஒரு குவளை மலர் தோன்றியதென்பதும் அதைப் பெருமானுக்குச் சூட்டினார்கள் என்பதும் பழைய வரலாறுகள். காவி - குவளை மலர். மூலமின்றி - எங்கிருந்து வந்ததென்று அறியமுடியாதபடி. வாவியினுள் - சுனையுள். தொழார் கையை-முருகனைத் தொழாதவர் கையை. பிடிப்பேன் - பிடித்து வெட்டிப்போடுவேன் என்பது கருத்து. ஏர்க்காலாய்க் கட்டியுழுவேன் : 'பேய்க்காலில் வடம்பூட்டி ஏர்க்கால் சேர்ப்பேன்' - முக். கக. பன்னிருசெங்கைக் கோ-முருகன். கொண்டிக் கொழு - ஏரின் கொழு மாட்டும் ஆணி.

சேவகன்செங் காவி மலைத்
தேவநா யகன்பேர் பெற்ற
திடம்பெருகு திருமலைக்
குடும்பனும் நானே. கக

## பள்ளியர் குடிப்பிறப்புக் கூறுதல்

### கலிப்பா

கடிக்கமலத் தாட்டுணையான் காவிவெற்பை வாழ்த்திமதன்
முடிக்கரசாய்த் தோன்றுகின்ற மூத்தாள் இளையாளும் [க்
அடிக்கனங்கொண் டோங்குமுலை யாரவெற்பாற்சின்ன இடை
கொடிக்கலக்கண் செய்வார் குடிப்பிறப்புக் கூறுவரே. கஉ

மூத்த பள்ளி

### சிந்து

மன்னுமூ விரண்டுமுகப்
பன்னிரண்டுகைக் குமரன்
வடிவுடைய திருமலையிற்
குடிபுகுந்த நாள்

---

கக. தேவநாயகன் - தேவசேனாபதி. பேர்பெற்ற : கo. திடம் - வலிமை.

கஉ. கடி - மணம். கமலத் தாள் துணையான் - இரண்டு திருவடித்தாமரைகளையுடைய முருகன். காவி வெற்பு-குவளை மலை. மதன் - மன்மதன்; அவனுக்கு முடி, பெண்களின் தனம். முலை யார வெற்பால் - மாலையணிந்த மலைபோன்ற தனங்களால். இடைக் கொடிக்கு - கொடிபோல மென்மையான இடைக்கு. அலக்கண் - துன்பம்.

பன்னிடுமுக் காலப்பூசை
இன்னமும் நடக்க வைத்த
பண்ணைப் பள்ளர் கோத்திரத்திற்
பெண்ணடிமை நான்
கொன்னுனைவேற் கண்ணி வள்ளி
யம்மையை முனம் வளர்த்த
குறவர் எங்கள் பாலர் காது
குத்தி வளர்ப்பார்
செங்நெல் வயல் சூழும் பண்ணை
நன்னகர் அறம் வளர்த்த
தேவி வட வாரி நாட்டுப்
பள்ளியும் நானே. கங

இளைய பள்ளி

மூந்துபுடார்ச் சுன புரத்
தெந்தை குற்றாலர் தருவோர்,
மூன்றெனுங் குறும் பலாவுந்
தோன்றிய நாளிற்

---

கங. முக்காலப் பூசை : இக்காலத்தில் திருமலை முருகனுக்குத் தினமும் எட்டுக்காலம் பூசை நடைபெறுகிறது : காலை விசுவரூப தரிசனம், உதயமார்த்தாண்டம், சிறுகாலை சந்தி, காலை சந்தி, உச்சிக்காலம், மாலை, அர்த்தசாமம, ஏகாந்த சேவை ஆக எட்டுக்காலம். கொல் நுனைவேல் - கொல்லவல்ல கூரிய நுனியுடைய வேல். பண்பை நன்னகர் - பண்பைநகர். அறம் வளர்த்த தேவி - பண்பை அம்பிகை திருநாமம் (அறம்வளர்த்த நாயகி, தரும சம்வர்த்தனி என்றும் வழங்கும்). வடவாரி நாடு : எ-ம் பாடல் குறிப்புரை பார்கக. பண்பையை யுள்ளடக்கிய நாடு வடவாரி நாடென்று வழங்கியதாக 15, 16-ம் நூற்றாண்டுகளிலெழுந்த பாண்டியர் சாசனங்களால் தெரியவருகிறது.

கச. புடார்ச்சுனபுரம் - குற்றாலத்தின் பெயர்களுள் ஒன்று. பாசுபதாஸ்திரம் தேடிவந்த அருச்சுனனுடைய

பைந்தமிழ் நன்னகர் தன்னிற்
சொந்தமாக வைத்த பண்ணைப்
பள்ளர் எங்கள் தாய்வழியும்
தந்தை வழியும்
இந்தத்திரு மலைப் பள்ளன்
வந்தென்னைச் சரடு செய்தே
இரண்டுடல் உயிரொன் றென்றான்
இன்றை வரைக்கும்
சிந்தனையில் லாமற் பண்ணைக்
கந்தர் பண்ணைச் சேரிவாழுஞ்
செய்யதென் னாரி நாட்டுப்
பள்ளியும் நானே. கச

---

விபூதிச்சம்புடத்தை இறைவன் ஒளித்துவைத்துக் குற்றாலத்தில் போய்த் தேடும்படி சொன்னாராம். குற்றாலத்திலே அவன் அதை மீட்டும் பெற்றமையால் அவ்வூருக்குப் புடார்ச்சுன புரம் என்ற பெயர் அமைந்ததாம். (புடம்-சம்புடம்.) குற்றா லர் - குற்றாலநாத சுவாமி. தரு ஓர் மூன்றெனுங் குறும்பலா- குற்றாலம், கோவிதாரம், சமருகம் என்ற மூன்று பெயருடைய வரையாத்தி மரமாகிய குற்றாலத் தலவிருட்சம். அவ்விருட்சம் தோன்றிய நாளிலேயே தன் முன்னோர் வழியும் தோன்றிய தாகப் பள்ளன் கூறுகிறான். நன்னகர் - குற்றாலம் ; திருஞான சம்பந்தர் பாடிய பதிகங்கள் பெற்றமையால் 'பைந்தமிழ் நன்னகர்'. சரடு செய்தே - தாலி கட்டி ; 'பண்டே சரடு கட்டிக் கொண்டான் என்னை' - முக். கரு. தென்னாரி நாடு : எ-ம் பாடல் குறிப்புரை பார்க்க.

## நாட்டு வளம்

### கலிப்பா

துன்னுமலை நாடுமந்தச் சோணுடுங் கீழ்படவே
பன்னுதமி ழாலுயர்ந்த பாண்டிவள நன்னாட்டில்
நன்னருறுந் தென்னாரி நாடும்வட வாரிநன்னு(டு)
என்னும் இருநாட் டினியவளஞ் சொல்வேனே. கரு

### மூத்த பள்ளி

### சிந்து

மலரி லாரளி இந்துளம் பாடும்
மடையி டங்கணி வந்துளம் ஆடும்
சலச வாவியிற் செங்கயல் பாயும்
தரள மீன்றவெண் சங்கயல் மேயும்

---

கரு. துன்னு மலை நாடு - மலை நெருங்கிய நாடு ; சேர நாடு. சோணுடு - சோழ நாடு. தமிழாலுயர்ந்த தென்றது. மதுரையிலே தமிழ்ச் சங்கம் இருந்தமை முதலிய வரலாறுகளைக் கருதி. நன்னர் - நன்மை.

கசு. ஆர் அளி - மொய்க்கின்ற வண்டு. இந்துளம் : இந்தளம் என்ற பண் ; இப்பண்ணிலே தேவாரங்கள் சிலவும் பாடப்பெற்றுள்ளன. இடங்கணி - சங்கிலி. வந்துளம்: வந்து உளம் ; உளம் - உள்ளான் என்ற பறவை. மீன் கொத்துவதற்காக இப்பறவை வந்து மதகுகளிடையே கட்டப்பெற்ற சங்கிலியில் இருந்து வாலை ஆட்டிக்கொண்டிருக்கும். சலச வாவி - தாமரைத் தடாகம். கயல் - கயல் மீன். தரளம் - முத்து. சங்கு அயல் மேயும் எனப் பிரிக்க.

குலமின் ஞர்மழை பெய்யெனப் பெய்யும்
குடங்கை ஏற்பவர் செய்யெனச் செய்யும்
புலவர் போற்றுந் திருமலைச் சேவகன்
புகழ்வட வாரி நாடெங்கள் நாடே. கசு

இளைய பள்ளி

வளருங் காவில் முகில்தொகை ஏறும் - பொன்
மாட மெங்கும் அகிற்புகை நாறும்
குளிரும் மஞ்ஞையுங் கொண்டலுங் காக்கும் - செங்
கோல்முறை மன்னர் மண்டலங் காக்கும்
இளமின் ஞர்பொன் னரங்கில் நடிக்கும் - முத்
தேந்தி வாவித் தரங்கம் வெடிக்கும்
அளியுலாங் கொன்றை சூடுங் குற்ருலத் - தென்
ஐயன்தென் ஞரி நாடெங்கள் நாடே. கஎ

---

கசு. குல மின்ஞர் மழை பெய்யெனப் பெய்யும்: 'கொழுநற் றொழுதெழுவாள்-பெய்யெனப் பெய்யும் மழை' - குறள். குடங்கை - உள்ளங்கை. ஏற்பவர் யாவரும் துறவிகளும் ஞானிகளுமா யிருத்தலினுலே, அவர்கள் வாக்குப் பலிக்கும்.

கஎ. கா - சோலை. முகில் தொகை - மேகக் கூட்டம். மஞ்ஞை - மயில். கொண்டல் - கார்கால மேகம். மண்டலம் - உலகம். மின்ஞர்: பெண்கள். வாவித் தரங்கம் - குளத்திலெழுந்த அலை. அளி உலாம் - வண்டு மொய்க்கின்ற. ஐயன் - குற்ருல நாதன்.

முத்த பள்ளி

களம ராலை கொழித்துத் தறிக்கும்
கழைமுத் தெங்கும் வெடித்துத் தெறிக்கும்
விளரி நாதம் பிரமரம் பாடும் - கை
வில்லின் கல்விச் சிரமரம் பாடும்
வளர்கு மாரர்கள் கல்வி படிக்கும்
மனையில் ஆரணச் செல்வி நடிக்கும்
அளவி லாண்மைத் திருமலை முத்தையன்
அருள்வட வாரி நாடெங்கள் நாடே. கஅ

இளைய பள்ளி

அமுதம் போலமின் னார்வள்ளை பாடும்
அதுகண் டேகுயிற் பிள்ளைகள் கோடும்
குமுத மாமுகை பாம்பென ஆடும்
குருகும் பேடுந்தண் சேம்பினி லோடும்

---

கஅ. களமர் ஆலை - உழவரது கரும்பாலை. தறிக்கும் - வெட்டிப்போடும். கழை முத்து - மூங்கிலில் வெடித்த முத்து; முத்துப் பிறக்கும் இடங்களுள் மூங்கிலும் ஒன்று. தெறிக்கும் - தெறித்து விழும். விளரி நாதம் - யாழ் நரம்புகள் ஏழனுள் ஒன்றான விளரியில் பிறக்கும் நாதத்தை. பிரமரம் - வண்டு. வில்லின் கல்வி - வில்வித்தை. சிரமர் அம்பு ஆடும் - (அந்த வித்தை காரணமாக) வீரர்கள் அம்பு தொடுப்பார்கள். ஆரணச் செல்வி நடிக்கும் : வீடுதோறும் வேதம் ஓதியபடி இருப்பார்கள்.

கக. மின்னார் : பெண்கள். வள்ளை - வள்ளைப் பாட்டு ; உரலிலே நெல் முதலியன இட்டு மகளிர் குற்றும்போது பாடும் பாட்டு. கோடும் - கோணும் ; அதாவது, பெண்களுடைய பாட்டுக்கு நம் பாட்டுத் தாழ்ந்து போயிற்றே என்று

கமநி லாநித் திலங்கைக்குக் காட்டும்
கதிர்நி லாவிண் ணெலாம்முக்கிக் காட்டும்
உமைம ணாளன்குற் றாலநன் னாயகன்
ஓங்குந்தென் னாரி நாடெங்கள் நாடே. கக

## குயில்

### கலிப்பா

**க**யிலைமலை யானீன்ற காவிமலை யான்அயிலை
மயிலையுடை யானடிமை வாய்த்தபண்ணைப் பள்ளியர்கள்
குயிலைமனங் கொண்டாடிக் கூவுகநீ என்றுசொல்லும்
பயிலைமதன் கேட்டயர்ந்தாற் பள்ளருக்கங் கென்னாமே. உ0

---

குயிற்பிள்ளைகள் நாணமடையும். குமுதம்-ஆம்பல். மாமுகை-மலரும் பருவத்திலுள்ள பெரிய அரும்பு. ஆடும்-தென்றலிலே ஆடும். குருகு - நாரை. பேடு - பெண் பறவை. கமநிலா - முழுமதி ; கமம் - நிறைவு ; 'கமம் நிறைந் தியலும்' - தொல்காப்பியம், சொல். நஙு; 'கமஞ்சூல் மாமழை' - முருகாறு, எ. நித்திலம் - முத்து ; பெண்கள் முத்தினாலே செய்த பந்தை வைத்துக்கொண்டு விளையாடுகிறார்கள். முத்தினாலான பந்து முழுமதிபோல ஒளி விடுதலினாலே, இருளான காலத்தும் பந்தைக் கையால் பற்றிக்கொள்ள இயலும் என்பது கருத்து. முத்தினாலே பந்து செய்யப்பெற்றிருக்கும் என்பதை, 'ஆடுங் கழங்கும் அணிவிளக்கும் அம்மனையும் பிறவு மெல்லாம், பாடி அவைப்பனவும் பந்தாடப் படுவனவும் பனிநீர் முத்தம்' என்ற பழம் பாடலால் உணரலாம். முக்கி - முழுகச் செய்து.

உ0. கயிலைமலையான் - சிவபெருமான். அயிலை மயிலையுடையான் - வேலாயுதத்தையும் மயில்வாகனத்தையு முடையவன். பயிலை-சைகையை. குயிலைக் கூவும்படி கேட்டுப் பள்ளியர் பாடும் பாடலைக் கேட்டு மன்மதனே அயர்ந்து விடுவானென்றால், பள்ளரைப்பற்றிச் சொல்லவா வேண்டும் என்பது கருத்து.

## குயிற் சிந்து

எம்மலையும் பரவுதிரி கூடமலை மலயமுனி
இறைஞ்சவரு திருமலை இரண்டும் - குயிலே [க்
கைம்மலையன் றுரித்தான்பொன் மலைவெள்ளி மலையெனக்
கர்லமுஞ்சீர் பெற்றிருக்கக் கூவாய் குயிலே. உக

பண்பைவளம் பதியுமந்தப் பதிமேவு பல்குடியும்
பரிசனமும் அரசனமும் பாரும் - குயிலே
அன்புபெறு நகரீசர் சன்னிதியும் திருமலைமுத்
தையனும்நன் றுயிருக்கக் கூவாய் குயிலே. உஉ

மானீமேலை நாளீன்ற வள்ளிநா யகிகணவன்
மன்னுதிரு மலையான் சன்னிதியும் - குயிலே
மேன்மேலுந் திருப்பணியும் திருப்பணிசெய் அடியவரும்
மிகவூழி வாழியெனக் கூவாய் குயிலே. உங

---

உக. திரிகூடமலை - குற்றுலம். மலயமுனி - அகத்திய முனிவர். இறைஞ்ச - துதிக்க. கைம்மலை - கையுடைய மலை, அதாவது யானை. உரித்தவன் சிவபெருமான். பொன் மலை, வெள்ளிமலை என்பன, மேருவும் கயிலாயமும் ; இவைபோல, குற்றுல மலையும் திருமலையும் இருப்பனவாக.

உஉ. அரசனம் - அரனுடைய அடியார். பாரும் - பூமியிலுள்ளாரும். நகரீசர் சன்னிதி : பண்பைச் சிவாலயத்தில் சிவபெருமானுக்கு நகரீசர், நகரீசுவரமுடையார் என்ற பெயர் பழமையாக வழங்கும்.

உங. மேலை நாள் - முற்காலத்தில். மான் ஈன்ற வள்ளி நாயகி - வள்ளிக்கிழங்கு அகழ்ந்தெடுத்த குழியிலே வள்ளியம்மையை ஒருமான் ஈன்றதென்பதும் பின்னர் வேடர் வள்ளியை எடுத்து வளர்த்தனரென்பதும வரலாறுகள். 'திருப்பணியும் திருப்பணி செய் அடியவரும' என்ற குறிப்பு, திருப்பணிகள் நடந்துவந்த காலத்திலே இந்நூல் செய்யப்பெற்றது என்பதைப் புலப்படுத்துகிறது.

கோதைகுழல் வாய்மொழியுங் குறும்பலவும் பெரும்பல
கொடுத்தெம்மைக் காத்தகுற் றாலைனைக்
நாதர்திருச் சன்னிதியும் வடவருவி கொழிக்கும்சித்ரா
நதித்துறையும் வாழவே கூவாய் குயிலே. உச

முனிவர்பணி செழுங்காவித் திருமலைமுத் தையன்மகிழ்
முகிழ்த்தமிகு வளந்தழைக்கக் கூவாய் குயிலே
இனியதிறல் அடியவரும் அடியவர்கள் செயுந்தொழிலும்
இயல்புடன்சீ ருந்தழைக்கக் கூவாய் குயிலே. உரு

நீதிபரன் சின்னணைஞ்ச பெருமாளுச் சிதவானும்
நீணிதியுங் கருவூலப் பொருளும் - குயிலே
கோதிலாச் செங்கோலும் ஆதினமுஞ் சந்தானக்
குமரர்களுந் தழைக்கவே கூவாய் குயிலே. உசூ

---

உச. வடவருவி - குற்றாலத்தில் ஆலயத்தின் பின்புறத்தே சித்திராநதி அருவியாக வந்து விழுகிறது; அவ்வருவியின் பெயர் வடவருவி. 'வற்றா வட அருவியானே' - குற்றாலக் குறவஞ்சி.

உரு. முகிழ்த்தம் - முகூர்த்தம். திறல் - வலிமை.

உசூ. நீதிபரன் - நீதிமான்; சின்னணைஞ்ச பெருமாள்: வடகரை ஜமீன் தலைவராயிருந்த சிவராம சின்னணைஞ்சாத்தேவர் (கி. பி. 1729 - 1731). திருமலையிலே பல திருப்பணிகள் இவர் காலத்தே செய்யப்பெற்றன. சந்தானக்குமரர்கள் என்று கூறியிருப்பது, இவருடைய தம்பியர் ஐவரை. (சந்தானப் பிறவி என்பது, உடன் பிறந்தாரைச் சுவீகாரம் செய்து கொள்ளும் ஒருமுறை என்று தெரிகிறது.) இவர்கள் 'தழைக்கவே கூவாய் குயிலே' என்று ஆசிரியர் பாடுவதாலும், 'திருப்பணி செய் அடியவரும் மிக வூழி வாழி' என முன்னா (உஙு) கூறுவதாலும், இந்நூல் பாடிய காலம் சின்னணைஞ்சாத்தேவர் காலம்; உத்தேசம் கி. பி. 1730 ஆக இருக்கலாம். உச்சிதவான் - மேன்மையுடையவன். கோது இலா - குற்றமில்லாத. ஆதினமும் - கோயிலின் உரிமையும். கருவூலம் - பொக்கிஷம்.

திங்கள்மும் மாரிபெய்து வன்பிணிகள் அணுகாமல்
தென்பாண்டி நாட்டிலுள்ள சனமும் - குயிலே
அங்கண்நல் லடியவரும் கவிஞோரும் வேதியரும்
அறநெறியுந் தழைக்கவே கூவாய் குயிலே. உஎ

## பள்ளியர் கும்மி யடித்தல்

### கலிப்பா

உளறியடிக் குங்கேழ லொன்றைவதைத் தரிந்துமஞ்சட்
கிளறி யடிக்கடியே கிண்டிவெந்த கறியுடனே
அளறியடித் தேவெறிகொள் ளரக்கையுண்டபள்ளியர்வாய்
குளறியடிப் பார்கூடிக் கும்மி யடிப்பாரே. உஅ

### கும்மி

கும்மியடி பெண்ணே கும்மியடி - இரு
கொங்கைகளுங் காப்புங் குலுங்கத்
தெம்முனை வேலனைக் கொண் டாடிச்
சேர்ந்து கும்மி யடியுங்கடி. உகூ

---

உஎ. வன்பிணி - கொடிய நோய். அங்கண் - அங்குள்ள. கவிஞோரும் - கவிஞரும்.

உஅ - ௩கூ. கும்மியடித்தல் என்ற பகுதி, பள்ளுப் பாட்டுக்கள் பலவற்றில் இராது.

உஅ. கேழல் - பன்றி. அளறி - அலறி. அரக்கை - அரக்குக் கள்ளை; 'தொண்டிக் கள்ளரக்கு' - சஎ.

உகூ. தெம்முனை - போர்க்களம்; அதில் வெற்றி பெறுகின்ற.

பள்ளியரே வட்டம் போடுங்கடி - ஐயன்
பன்னிரு தோள்வெற்றி பாடுங்கடி
கள்ளை எடுத்துக் குடியுங்கடி - கூடிக்
கட்டாய்க் கும்மி யடியுங்கடி. ௩௰

தெய்வக் குறும்பலா விருப்போருந்
தேவி குழல்மொழி பங்காளர்
சைவத் தலைவரைச் சித்ரசபைச்
சங்கர லிங்கத்தை வாழ்த்திக் கொண்டே. ௩௧

வானர சாள் இந்த்ரன் தேவிக்குத் - திரு
மங்கிலி யப்பிச்சை யிட்டானைத்
தானவர்க் காய்அயில் தொட்டானைச்
சண்முக மூர்த்தியை வாழ்த்திக் கொண்டே. ௩௨

---

௩௦. வட்டம் போடுதல்- சுற்றி வருதல்.

௩௧. சித்திரசபை, குற்றாலத்திலே ஆலயத்தின் வடபக்கத்தில் ஐந்தருவிச்சாலையிலுள்ளது. உமாதேவியார் கண்டு களிக்கச் சிவபிரான் இங்குத் திருநடன மாடியருளினார். சிவபெருமானுடைய திருவுருவத்தைச் சுவரில் பிரமன் சித்திரமாக எழுதி வைத்த சிறப்புப் பெற்றமையால் சித்திரசபை என்ற பெயர் பெற்றது. ஞானசபை என்றும் இதற்குப் பெயருண்டு. இங்கே இறைவன் திருவுரு ஸ்படிகலிங்கம்; இதையே ஆசிரியர் சங்கரலிங்கம் என்கிறார்.

௩௨. மங்கிலியப் பிச்சை யிட்டதாவது, சூரபதுமனை யழித்து, இந்திர பதவியிலே இந்திரனை மீட்டும் இருக்கச் செய்தது. தானவர் - அசுரர். அயில் தொட்டானை - வேல் விட்டவனை.

'சிறுக்கி 'அழகி யுதட்டுக்குள்ளே
சிரிக்கும் வெறியிடு செம்மிமகன்
கறுப்ப னவளை யணைத்துதட்டைக்
கவ்விச் சுழன்று விழுவதுபார். ௩௩

வாகாக் கொண்டை முடியுங்கடி - முலை
மாராப்பைக் கட்டி யிறுக்குங்கடி
ஆகா வழிம்புத் திருமலைப் பள்ளன்
அண்டாமற் கற்கொண் டெறியுங்கடி. ௩௪

காரானை பாக னென்னுங் காள
கண்டே சுரத்து மணிகண்டனும்
ஓரானை யூர்தி மருமகனும்
உற்ற துணைநமக் குண்டு பெண்காள். ௩௫

---

௩௩. கும்மியடிக்கும்போதே, பள்ளன் பள்ளியின் காதல் லீலைகளை ஒருத்தி மற்றவளுக்குக் காட்டுகிறாள். அழகி - அப் பள்ளி. செம்மி என்பவள் மகனான கறுப்பன் அப்பள்ளன்.

௩௪. வாகாக - பொருந்த. மாராப்பு - மார்பில் அணிந்த சேலை. ஆகா அழிம்பு : கேடான வம்பு செய்பவன் என்பது கருத்து. திருமலைப் பள்ளன் : இப்பள்ளின் கதாநாயகன். அண்டாமல் - அருகிலே வராமல். 'ஆகா வழிமுத் திருமலைப் பள்ளன்' என்று பிரதியில் காணப்படுகிறது.

௩௫. காரானை - கரிய பிடி ; பிடிபோன்ற உமாதேவி யார். பாகன் - சிவபெருமான். காளகண்டேசுரம் என்பது பண்பை நகரீசுவரர் ஆலயத்துக்குரிய பெயராயிருக்கலா மென்று தெரிகிறது. மணிகண்டன் - நீலகண்டனான சிவபெரு மான். (மணிகண்டன் சாத்தா இங்குள்ள ஐயனார்.) ஓரானை - ஐராவதம். ஊர்தி - அந்த யானையை ஊர்பவனான இந்திரன். மருமகன் - முருகன் ; தெய்வயானை கணவனானமையால்.

'காளகண்டசுரத்து' என்றும், 'ஊர்தி திருமகனும்' என்றும் பிரதியில் காணப்படுகிறது.

குறிப்புட னேநக ரீசரையும்
கோதை அறம்வளர் தேவியையும்
சிறப்புட னேநீர் எல்லோரும்
சிந்தனையாக் கும்மி பாடுங்கடி. ௩௬

மாது நரபெலி கொண்டமகா
மாயி மலரடி சென்னிவைத்துச்
சாதக மாகவே எல்லோருந்
தழைக்கக் கும்மி யடியுங்கடி. ௩௭

செங்காவி வாவி புடைசூழும்
செய்ய திருமலை வேலவற்கு
மங்காத செல்வமெப் போதுந் தழைத்திட
வாழ்த்திக் கும்மி யடியுங்கடி. ௩௮

வண்ண வாவித்திரு மாமலையில்
வாழ்கும ரேசர் திருவருளால்
பண்ணையுட னேருஞ் சீருந் தழைத்திடப்
பாடிக் கும்மி யடியுங்கடி. ௩௯

---

௩௬. முன்னமே (௩௧) குற்றால நாதரையும் அம்மையையும் சொன்னவர் இங்குப் பண்பை நகரீசரையும் அம்மையையும் குறிப்பிடுகிறார்.

௩௭. நரபெலி கொண்ட மகாமாயி : நரபலி கொண்ட அம்மன் கோயில் என்பது திருமலை முருகன் கோயிலைச் சேர்ந்த சுற்றுக் கோயில்களுள் ஒன்று. மகாமாயி - மாரியம்மன். சென்னி வைத்து - தலையிலே சூடி.

௩௮. செங்காவி - செங்குவளை; 'செங்காவி வாவித் திருமலை' என்பது திருமலைக் காதல். மங்காத - குறையாத.

௩௯. வண்ண வாவி - அழகுடைய குளம்.

## தெய்வம் போற்றுதல்

### கலிப்பா

தண்ணாருங் காவிச் சயிலச் சடானனன்வேள்
கண்ணா றிரண்டுடைய கந்தர்பண்ணைப் பள்ளரெல்லாம்
விண்ணார் மழைவரவு வேண்டியிரு கைகூப்பி
உண்ணா விரதமிருந் துற்றதெய்வம் போற்றினரே. ௪௦

### சிந்து

வரந்தரு வீரே - மழைபெய்ய
வரந்தரு வீரே - சதவித
மகநா யகரே - மழைபெய்ய
வரந்தரு வீரே
கரந்தசெஞ் சடையார் - அருள்திருக்
காவிவெற் புடையார் - பண்ணைக்
காலமுந் தழைக்க - மழைபெய்யக்
கருணை செய்வீரே. ௪௧

---

௪௦. தண் ஆரும் - குளிர்ச்சி பொருந்திய. சயிலம் - மலை. சடானனன் - ஆறுமுகன். விண்ணார் - விண்ணிலே பொருந்திய.

௪௧ - ௪அ. இந்தப் பாடல்களிலே, பள்ளரும் பள்ளியரும் மழை வேண்டி, சிவபெருமான், உமாதேவி, திருமால், முருகன், விநாயகன், இந்திரன், காளி, வைரவன், சத்த கன்னியர், அகத்தியர், கறுப்பன், சங்கிலி வீரன் முதலியோருக்குப் பொங்கலிட்டுக் குரவையிடுவது சொல்லப்படுகிறது.

௪௧. சதவித மக நாயகர் - நூறு யாகங்கள் செய்தவன், (சதமகன்) இந்திரன். கரந்த - மறைத்த.

சிவபூ சுரரே - வணங்கிய
நகரீ சுரரே - உலகுய்யத்
திறம்வளர்த் தவளே - பண்பையில்
அறம் வளர்த் தவளே
புவனு பதியே - நன்னகர்ச்
சிவனூர் நிதியே - அருட்க்ருபை
பொழியாய் விழியே - அயிலெனுங்
குழல்வாய் மொழியே. சஉ

பணியுண்ட கோவே - துயில்கூர்
இலைகொண்ட தேவே - பரவும்உம்
பருக்கதி பதியே - திருமலைத்
திருக்கண பதியே
அணிகொண்டு போரே - செயுந்திறல்
மணிகண்ட னூரே - மொழிக்கனி
யலைக்கன்னல் நேரே - சொலுந்திரு
மலைக்கன்னி மாரே. சங

---

சஉ. சிவபூசுரர் - சைவ அந்தணர். நகரீசுரர், அறம் வளர்த்தவள் : சுவாமி அம்பிகை திருப்பெயர்கள். உலகுய்ய அறம் வளர்த்தவள் என்றது, காஞ்சியில் முப்பத்திரண்டறங்களையும் வளர்க்கக் காரணமாயிருந்தமையால். புவனுபதியே : 'புவன நாயகனே அகவுயிர்க் கமுதே' - திருவிசைப்பா ; இங்கே, குற்றால நாதர். சிவனூர் நிதியே : நிதியாகிய குழல்வாய் மொழியம்மை. விழியே அயிலெனும் குழல்வாய் மொழி எனக் கூட்டுக.

சங. பணியுண்ட - அணிகள் பூண்ட. துயில் கூர் இலை கொண்ட கோவே - ஆலிலையில் துயில் கொள்ளும் திருமால். உம்பருக்கதிபதி - இந்திரன். திறல் - வலிமை. மணிகண்டனூர் - மணிகண்டன் சாத்தா என்ற ஐயனூர். மொழி கனி அலை கன்னல் நேரே சொல்லும் - கனியும் கரும்பும்போல இனித்த மொழியுடைய. கன்னிமார் - சத்த கன்னியர்.

ஆலிக்குங் கூளிப் - பெரும்படைச்
சூலக்கங் காளி - கொடுங்கொலை
யடும்பகைக் கடும்போர் - செயுமவர்க்
கிடும்புசெய் இடும்பா
தாலிக்கு வேலி - கொடுத்துவிண்
பாலிக்குங் காவித் - திருமலைச்
சண்முக னரே - பனிமலைப்
பெண்மக னரே. சச

கனிதவ னரே - பெறவல்ல
கரியவ னரே - துணைசெய்யக்
கண்டது நீயே - நரபெலி
கொண்டருள் தாயே
தனுமகத் துவரே - கல்விமுற்
றெனுமகத் தியரே - விறலுடைத்
தைரிய னரே - சூலக்கை
வைரவ னரே. சரு

---

சச. ஆலிக்கும் கூளி - ஆர்ப்பரிக்கின்ற பேய்கள். சூலக் கங்காளி - சூலப்படையுடைய சிவசத்தி ; மலைமேல் வடபுறத் திலே காளிக்குத் தனியாக ஒரு கோயில் அமைந்திருக்கிறது. அடும்பகை - பகையைக் கொல்லுகின்ற. இடும்பு - துன்பம். இடும்பன் - குமாரக் கடவுளின் படைத் தலைவன் ; திருமலை யில் இடைவழியில் இடும்பனுக்குத் தனியாக ஒரு கோயில் அமைந்திருக்கிறது. தாலிக்கு வேலி கொடுத்து : ௩உ-ம் பாட லில் 'இந்த்ரன் தேவிக்குத் திருமங்கிலியப் பிச்சை யிட்டானை' என்பது காண்க. விண் பாலிக்கும் - வானுலகத்தைக் காக்கும். பனிமலை - இமயமலை. பெண் - உமாதேவியார்.

சரு. கனி தவனா - முதிர்ந்த தவமுடையவர்கள் மட் டுமே. கரியவனர் : விநாயகர். நரபெலி கொண்டருள் தாய் : ௩எ. தனு மகத்துவர் - வில் வித்தையில் வல்லவனான திருமலைக் கிருஷ்ணன். கல்வி முற்று எனும் - கல்வியின் நிறைவு என்னத்தக்க.

கண்ட சொப்பனமோ - விண்மொழி
விண்ட வுற்பனமோ - கறுப்பன்முன்
கடைந்தசெப் பெனவே - தேங்காய்
உடைந்த சித் திரமோ
தண்டினர் மிண்டன் - மதப்புலி
சங்கிலி வீரன் - பலிகொள்ளும்
சமயப் பண் பறிந்தே - மதுகுமு
குமெனப் பொங் கியதோ. ௬௬

தொண்டிக்கள் ளரக்கும் - பனங்கள்ளும்
பண்டியிற் பெரிய - குடந்தனில்
தொடர்பெற அடைத்தே - கறிசோ(று)
அடைவுடன் படைத்தே
எண்டலம் புரக்கும் - நரபெலி
கொண்டவள் முனமே - குரவையிட்(டு)
இங்கித மாக - நாமிடும்
பொங்கல் பொங் கியதோ. ௬௭

---

௬௬. சொப்பனம் கண்டது போலவும், தெய்வச் செயல் நிகழ்ந்தது போலவும் தேங்காய் உடைந்தது. விண்மொழி - அசரீரி. விண்ட உற்பனம் - சொல்லிய நிகழ்ச்சி. உடைந்த சித்திரம் - நறுக்காக இரண்டு துண்டாய்த் தேங்காய் உடைந்த அழகு. கறுப்பன் : திருமலையிலுள்ள சில்லறைத் தெய்வங்களுள் ஒன்று; கறுப்பனுக்குத் தனியே ஒரு கோயிலு மிருக்கிறது ; இப்பள்ளுப் பிரபந்தம் பாடப்பெற்ற காலத் துக்குச் சற்று முன் பின்னாக ஒரு புலவர் இக்கறுப்பன்மீது காதற் பிரபந்தமொன்று பாடியிருக்கிறார். தண்டினர் மிண் டன் - தீயோரை அடக்கும் திண்மையுடையவன். சங்கிலி வீரன் - மற்றொரு சிறு தெய்வம். பொங்கியது : வடித்த கள் ளானது ' குமுகுமு 'வென்று பொங்கியது.

௬௭. தொண்டிக்கள், அரக்கு, பனங்கள் - கள் வகை கள். பண்டி - வண்டி. எண்தலம் புரக்கும் - எட்டுத் திசையும் காக்கின்ற. குரவை - நாவால் ஒலிக்கும் மகிழ்ச்சி யொலி. இங்கிதமாக - பக்குவமாக.

கொண்டைச் செஞ்சாவல் - குறுமறி
கண்டித்துப் பலியும் - கொடுத்தபட்
கூட்டமுங் கடுத்தே - உமைகளி
யாட்டமுங் கொடுத்தே
மண்டலந் தனிலே - சோபன
நந்திரு மலையான் - அருளால்
வயமுறப் பெய்யும் - மழையினிப்
பயமில்லை நமக்கே. சஅ

## மழைக் குறி

### கலிப்பா

வந்தித்தா டிப்பாடி மாசில்லாப் பூசையிட்டுச்
சிந்தித்தால் ஆருக்குந் தெய்வ மிரங்காதோ
பந்தித்தா ளோங்குபண்பைப் பள்ளர்கருத் தின்படியே
சந்தித்தா காயமழை தன்குறியுங் காட்டியதே. சகூ

### சிந்து

கொங்கு மின்னல் ஈழ மின்னல்
எங்கும் மின்னுது - கருங்
குயிலொளிக்க மஞ்சள்நிற
வெயிலெ றிக்குது

---

சஅ. குறுமறி - சிறிய ஆட்டுக்குட்டி, பட்கூட்டம் - பள்ளர் கூட்டம். கடுத்து - விரைந்து. உமை களியாட்டம் - கள்ளுண்டு காளிமுன் ஆடும் ஆட்டம்.

. சகூ. வந்தித்து - வாழ்த்தி. மாசில்லா - குற்றமில்லாத. பந்தித் தாள் ஓங்கு - வரிசையாக நெற்பயிரின் தாள்கள் செழித்த.

ருo. கொங்கு மின்னல், ஈழ மின்னல் - மேல் திசையிலும் தென் திசையிலும் தோன்றும் மின்னல் ; ‘ மலையாள

கங்கந் திரண் டேயொலிக்கு
தங்கண் விசும்பில் - வரக்
கண்டோம் வெள்ளைப் பூச்சியுங்
கும்பீடு நாச்சியும்
மங்களமாய்த் திங்கள் தோறும்
எங்கும்மும் மாரி - பெய்ய
வட்டமாக மொட்டைச் சித்தா
வெட்டுது புல்லை
எங்கள் திரு மலைக்கந்தர்
பொங்கரு ளினால் - பொய்யா
தின்று நாளைப் பெய்யும் மழை
நன்று பள்ளரே. ௫௦

## பள்ளர் திரண்டு வருதல்

மாரி பெய்யுங் கால்அணைகள்
ஏரி பதனஞ் - செய்ய
வட்டக் கூடை வெட்டரிவாள்
கொட்டுங் கைக் கொண்டே

---

மின்னல் ஏழுமின்னல் சூழமின்னுது' - முக். ௫௫. கங்கம் - பருந்து. அங்கண் விசும்பில் - விசாலமான வானத்தில். வெள்ளைப் பூச்சியும் கும்பீடு நாச்சியும் : இந்தப் பூச்சிகள் பறப்பது உடனே மழை வருமென்பதற் கறிகுறியாகும். சித்தா - ஒரு வகைப் பூச்சி. மேல் திசையிலும் தென் திசையிலும் மின்னல் மின்னுவதும், மஞ்சள் வெயில் எறிப்பதும், வானத்தில் பருந்துகள் திரிந்து ஒலிப்பதும், வெள்ளைப் பூச்சியும் கும்பீடு நாச்சியும் வருவதும், சித்தா புல்லை வெட்டுவதும், உடனே மழை பெய்யப் போகிறது என்பதைக் காட்டும் அறிகுறிகள். கும்பீடு என்பது பல்வரிக் கூத்தினுள் ஒன்றாக அடியார்க்கு நல்லார் கூறுகிறார்.

௫௧. பதனம் செய்ய - மழைத் தண்ணீர் ஓடிவிடாதபடி அணைகளையும் ஏரி மதகுகளையும் அடைத்துப் பாதுகாவல் செய்ய. கொட்டு - சிறு மண்வெட்டி.

சீரியநம் பண்ணைக் காரன்
காரியக் காரன் - மெச்சச்
சிங்கனுஞ் சங்கனும் புங்க
னுங்க லிங்க னும்
வீர னுங் குறுக் கிட்டானும்
வெங்கல வனுங் - திரு
வெட்டியுங் கொட்டியுங் கட்டை
வெள்ளைக் கண்ண னுஞ்
சூர னுங் தம்பிக் கில்லானும்
மொண்ணை மாடனும் - நெட்டைச்
சூரியனு மாகக் கூடி
வாரும் பள்ள ரே. ருக

கலிப்பா

இம்மலையே கயிலைமலை எனமருவுந் திருமலைவாழ்
செம்மலைநான் மலைவகலச் செங்கைகுவித் துய்வேனே
தும்மலையும் இருமலையும் தொடர்வினையாற் கருமலையும்
விம்மலையும் பொருமலையும் விளைத்தசென்ம மெடுப்பேனே.

---

ருக. பண்ணைக்காரன் மெச்ச, கூடிவாரும் என முடிக்க. சிங்கன் முதல் சூரியன் வரை வருவன, பள்ளர் பெயர்கள்.

ருஉ. இம்மலையே கயிலைமலை - 'திருமலையே தென்பாற் கயிலை மலையாமே' - என. செம்மல் - இறைவனை முருகன். மலைவு அகல - மயக்கம் நீங்க, தொடர்வினையால் - தொடர்ந்து வரும் வினையாகிய கன்ம மலத்தினால். கரு மலையும் - பிறவியிலே அகப்பட்டு மயங்கும். விளைத்த - விம்மல் முதலியவற்றை விளைத்த. எடுப்பேனே : எடுப்பவனாகிய யான் குவித்து உய்வேனே எனக் கூட்டுக.

## மழை வெள்ள வரவு

### சிந்து

சாதியி லுய ராதவர் குலத்
தலைவி தேவகி ஈன்றிடும்
தலைமக னுருக் கொண்டுபோய் - நெடுஞ்
சலதி மேய்ந்தவன் தம்பிபோற்
பூத ரந்தனை நாடி யேவரு
சீத மேகம் அன்னவன்
பொன்னின் மானைத் தொர்டர்ந்து வில்லொடு
புறப்பட் டாலெனப் புறப்பட்டே
சோதி மின்னொளி துள்ளவே - சிலை
மீது வளைத்திட் டாங்கவன்
தூவும் அம்பென அம்பு தொடுத்துத்
தாவும் மானது சாய்ந்திடும்

---

ருங. உயர் ஆதவர் குலம்-சூரிய குலம்; ஆதவன் - சூரியன்; அல்லது யாதவர் (இடையர்) குலம். இங்கே குறிப்பிடுவது, கிருஷ்ணன் தந்தையாகிய வசுதேவர் குலத்தை. 'உயராதவர் குலம்' என்ற தொனியும் இங்கே இருக்கிறது. தலைவி தேவகி - வசுதேவர் மனைவி. தலைமகன் உரு - முதற் பிள்ளையாகிய பலராமனுடைய நிறத்தை; அதாவது, வெண்ணிறத்தை. நெடுஞ் சலதி மேய்ந்து-அகன்ற கடல் நீரையுண்டு. அவன் தம்பிபோல் - பலராமன் தம்பியான கண்ணன் போற் கருநிறங்கொண்டு. வெண்ணிறமுடைய மேகம் கடலுக்குச் சென்று, கடல்நீரை யுண்டு, கருநிறங் கொண்டு வந்தது, அதாவது, மழை நீரைத் தாங்கிவந்தது என்பது கருத்து. பூதரம் - மலை. சீத மேகம் - குளிர்ந்த கருமேகம். அன்னவன் - இராமன். புறப்பட்டால் எனப் புறப்பட்டே-மாரீசனாகிய பொன் மானைத் தொடர்ந்து புறப்பட்டதுபோல மேகம் புறப்பட்டு.

போது கதறி வெடித்த ஓசையைப்
போல இடித்து முழக்கியே
பொம்மெனத் திருமலையிற் சுரந்து
பொழிந்து குறிஞ்சி பரந்ததே. ருரு

கலித்துறை - நெஞ்சறிவுறுத்தல்

மனமே உனக்கிது மாத்திர மேயுண்மை மந்திரவுற்
பனமே எவருக்குஞ் சோபன மேநன்மை பத்திகொண்டு
தினமே திருமலை அய்யனென் ருலது செந்தனமே
அனமே பரபத மேவினை நோய்க்கும் அவுழ்சதமே. ருச

---

ருரு. இராமன் வில்லொளிபோல இங்கே மின்னலொளி; இராமன் வில்லைப்போல இங்கே, வானவில்; இராமன் அம்பு தொடுத்ததுபோல இங்கே அம்பு ஆகிய நீர்த் தாரைகளைப் பொழிந்தது. மான் கதறிய ஓசைபோல, மேகம் இடித்து முழக்கிற்று. கருமேகம் வானவில்லைத் தோற்றுவித்து, மழையைச் சொரிந்து, மின்னி இடித்ததற்கு, இராமனுடைய செயல்கள் உவமை. சிலை - வில். சாய்ந்திடும்போது - மாரீசமான் அம்பு பட்டு விழுந்தபோது. பொம்மென - பொம்மென்ற ஒலியோடு.

ருச. மந்திர உற்பனமே - மந்திரமாகிய ஞானம். சோபனமே - மங்களமாகும். பத்தி கொண்டு - பக்தியோடு. செந்தனமே - செம்மை மிக்க செல்வமாகும். அனமே - அன்னமேயாகும்; உணவாகும். பரபதமே - மேலான பதமுமாகும். அவுழ்சதம் - ஔஷதம்: மருந்து; 'மருந்துமாகித் - தீராநோய் தீர்த்தருள வல்லான்' என்பது அப்பர் தேவாரம்.

# ஐந்திணை - குறிஞ்சி

## சிந்து

பரந்து குறிஞ்சிக் காவையும் - அதில்
விரிந்த குறிஞ்சிப் பூவையும்
    பணைத்த குஞ்சரக் கோட்டையும் - கரு
    வணைத்த அஞ்சுகப் பேட்டையும்
நிரந்த ரந்தொடர் அணியையும் - நறை
சொரிந்த ரும்படர் கணியையும்
    நெருங்கி முரல்ஐ வனத்தையும் - தினை
    சுருங்கு குரல்கொய் புனத்தையும்
இருந்த தொண்டகப் பறையையும் - இடை
திரிந்த குண்டகத் தறையையும்
    இருவி யம்புனத் தண்டையும் - சொரி
    அருவி யஞ்சுனை நண்டையும்

---

ருரு. குறிஞ்சிக் கா-மலைச்சாரலிலுள்ள சோலை. குறிஞ்சிப்பூ - குறிஞ்சி என்ற செடியின் பூ. பணைத்த குஞ்சரக் கோட்டையும் - பருத்த யானைக் கொம்புகளையும். கரு - குஞ்சு. அஞ்சுகப் பேடு - அழகிய கிளிப்பேடு. தொடர் அணி-பூமாலைகளின் வரிசை. நறை சொரிந்து அரும்பு அடர் கணி - தேனொழுகி அரும்புகளும் அடர்ந்த வேங்கை மரம்; கணி - வேங்கை. முரல் ஐவனம் - நெருக்கத்தினால் ஒலிக்கும் ஐவனமாகிய மலை நெல்லையும். தினை சுருங்கு குரல் கொய் புனம் - தினை விளைந்து முற்றிச் சுருங்கிய கதிரைக் கொய்யும் புனம். தொண்டகப்பறை - குறிஞ்சிக் குரியது. குண்டகத்தறை - குண்டு (குழி) களையுடைய தரை. இருவி - தினை முதலியவற்றின் அரிதாள்: 'இருவி வேய்ந்த குறுங்காற் குரம்பை' - குறிஞ்சிப்பாட்டு, கருந. புனத்து அண்டையும் - புனத்தருகிலும். சொரி யருவி - மலையிலிருந்து வீழ்கின்ற அருவி.

விரைந்து திரைக்கை நீட்டி இழுத்துப்
பொருந்து குரைக்கை காட்டி வேள்
வேலைத் தண்டைக் காலைத் தொழுதப்
பாலைப் பாலை புகுந்ததே. ௫௫

**கலித்துறை**

மனம்போம் வழிசென்று பொய்யைமெய் யாக
மகிழ்ந்ததைஉற்
பனம்போல் நினைத்தென்றும் வீண்நாள் கழித்திட்ட
பாவிக்கின்னம்
இனம்போய் வருவது சற்றறி யேன்இந்த
ஏழுலகுந்
தினம்போற்றுங் காவித் திருமலை யாஉன்
செயல்இதுவே. ௫௬

---

௫௫. திரைக்கை - அலையாகிய கை; 'அலைக்கரம் வீசியே' - ௩௩. குரைக்கை காட்டி - ஓசை எழுப்பி. வேள் வேலை - முருகனுடைய வேலையும். தண்டைக் காலை - தண்டை யணிந்த திருவடியையும். தொழுது அப்பாலை பாலை புகுந்தது - தொழுத பின்னர், அப்பாலுள்ள பாலை நிலத்தை யடைந்தது, மழை நீரால் மலையில் திரண்டுவந்த வெள்ளம்.

முருகன் குறிஞ்சிக்குரிய தெய்வமாதலின் அவன் வேலை யும் காலையும் வெள்ளம் தொழுதது என்றார் ஆசிரியர். 'சேயோன் மேய மைவரை உலகமும்' - தொல்காப்பியம். குறிஞ்சிப் பூ, யானை, கிளி, ஐவனம், தினை, தொண்டகப்பறை, அருவி, சுனையாடல் முதலியன குறிஞ்சித் திணைக்குரிய கருப் பொருள்கள்.

௫௬. உற்பனம்போல்-அறிவுக்குப் பொருந்தியதென்று. பாவிக்கு - பாவியாகிய எனக்கு. இனம் -.இன்னம். போய் வருவது - பிறப்பினிலும் இறப்பினிலும் போய் வருவது.

## பாலை

### சிந்து

புகுந்து நீத்த மரவமும் - பணை
மிகுந்து பூத்த குரவமும்
புல்வாய்க் குழுவுந் துயில்கொளுஞ் - சில
வல்வாய்க் கழுகும் முயல்களும்
முகந்து பிடிக்குஞ் சிலையரும் - இடை
நெகிழ்ந்து துடிக்கும் முலையரும்
முன்னாய்த் திரியும் பட்டியும் - சில
செந்நாய்த் திரளுங் குட்டியும்
பகுந்த மருப்புக் கலைகளும் - சினை
வகுந்த இருப்பை நிலைகளும்
பழமை தோன்றும் பாலையும் - மறக்
கிழவர் ஊன்று கோலையும்
தொகுந்தி ரைக்கரம் பரப்பி மலைக்கச்
சுருட்டி யிழுத்திட் டுரப்பியே
சூலத் திண்படை வாலைப் பெண்பதந்
தொடர்ந்து முல்லையில் நடந்ததே. ருஎ

---

ருஎ. நீத்த - வேரோடு பறிக்கப்பட்டு வந்த. மரவம் - மராமரம்; வெண் கடம்பு. பணை - கிளைகள். குரவம் - குரா மரம். புல்வாய் - மான். குழு - கூட்டம். துயில்கொளும் - உறங்கும். வல்வாய் - கொடிய அலகுடைய. முகந்து - தாங்கி யெடுத்து. சிலையர் - வில்லாளிகளான எயினர். முலையர் - முலையுடைய எயினப் பெண்கள். முன்னாய் - முன்னே. பட்டி - வேட்டை நாய். செந்நாய் - பாலைக்குரிய தொரு விலங்கு. பகுந்த மருப்புக் கலை - கிளைத்த கொம் புடைய கலைமான். வகுந்த - வகிர்ந்த. இருப்பை - இருப்பை மரம். பாலை - பாலை மரம். மறக் கிழவர் - முதிய மறவர். தொகுந் திரைக் கரம் - திரண்டெழுந்த அலையாகிய கை.

## கலித்துறை - மாலையிரத்தல்

நெருக்கு மராவுண்ட வெண்மதி யூற்று நிலாத்தழல்மெய்
கருக்கு மராவுங் கனிவாய்ப்பெண் பேதையைக் காமனம்பால்
உருக்கு மராமலர்த் தாமநல் காய்விண் ணுலகுதொழும்
திருக்கும ராமுரு காதிரு மாமலைச் சேவகனே. ருஅ

---

உரப்பி - பேரொலி செய்து. சூலத் திண் படை - வலிய படைக்கலமாகிய சூலாயுதமுடைய. வாலைப் பெண் - கன்னி; துர்க்கை : பாலைக்குரிய தெய்வம். சிவசக்தியை சித்தர் நூலார் வாலை என்ற பெயரோடு வழங்குவார்கள். பதம் தொடர்ந்து- திருவடியைப் பற்றி ; வழிபட்டு.

மரவம், குரவம், கழுகு, சிலையர், பட்டி, செந்நாய், இருப்பை, பாலை முதலியன பாலைக்குரிய கருப்பொருள்கள்.

ருஅ. இப்பாடல், முருகன்மீது காதல் கொண்டுள்ள தலைவிக்கு மாலை தரும்படி வேண்டுகின்ற தோழி கூற்று ; திரிபில் அமைந்திருக்கிறது.

நெருக்கும் அரா உண்ட - ராகுவாகிய பாம்பினாலே முன்னமே நெருக்கி உண்ணப்பட்ட. வெண்மதி - வெள்ளிய சந்திரன். நிலாத் தழல்-நிலவாகிய நெருப்பு. மெய் கருக்கும் - இப்பெண்ணின் உடலை வெதுப்புகின்றது. அராவும் - இவள் உயிரை அராவித் தேய்க்கின்றது. கனிவாய் - சிவந்த வாய். பேதையை நிலாத்தழல் கருக்கும், காமன் அம்பால் அராவும், என்க. உருக்கும் மராமலர் - இவள் உள்ளத்தை உருக்குகின்ற கடப்ப மலர் ; முருகனுக்குரியது ; ' மராஅத்து உருள் பூந் தண்தார் புரளும் மார்பினன் ' என்பது திருமுருகாற்றுப் படை. தாமம் - மாலை. நல்காய் - தருவாயாக.

## முல்லை

### சிந்து

நடந்த முல்லையி னிடத்திலே - கிடை
கிடந்த கொல்லையந் தடத்திலே
நறிய குல்லையைப் பறிக்குமாம் - கமழ்
வெறிகொள் முல்லையை முறிக்குமாம்
அடர்ந்த மூலியின் கணத்தையும் - முதற்
கடைந்த ஆவினல் லினத்தையும்
அடுப்பிடு மடைப் பாலையும் - அவர்
இடுக்கிய கடைக் கோலையும்
இடந்தனில் அசைத் தெடுக்குமாம் - தயிர்க்
குடந்தனை யொசித் துடைக்குமாம்
ஏவை நேரிட ஓடுமாம் - மரப்
பூவை வேரொடுஞ் சாடுமாம்
படர்ந்திடுந் திரு வடத்தனைப் - புவி
கடந்திடும் ஒரு தடத்தனைப்
பரவு மாம் புனல் அரவமா மெனப்
பலன்கொள் மருதங் கலந்ததே. ருகூ

---

ருகூ. கிடை - ஆட்டுக்கிடை, மாட்டுக்கிடை முதலியன. நறிய - மணமுடைய. குல்லை - வெட்சிச்செடி. வெறி - மணம். முல்லை - முல்லைக்கொடி. மூலியின் கணம் -' மூலிகைச் செடி கொடிகள். முதற் கடைந்த - முதலிற் கடைந்து வைத்த. ஆவின் நல்இனம்-தயிர்மோர் நெய் முதலியன. அவர்- ஆய்ச்சியர். கடைக்கோல் - கடைகோல் ; மத்து. ஒசித்து- அசைத்து. ஏவை நேரிட - அம்புபோல. வடம் - ஆலமரம் ; படர்ந்திடுந் திருவடத்தன் - பாற்கடலெங்கும் பரந்துள்ள ஆலிலைமீது பள்ளிகொண்டிருக்கும் திருமால். புவி கடந்திடும் ஒரு தடத்தன் - உலகமெல்லாம் அளந்த ஒரு திருவடியை

கலித்துறை

போய்த்தானை நாழிகை சேவித்த பேரந்தப்
 பொய்மருதஞ்
சாய்த்தானைக் கற்பகக் காவானைப் போற்செல்வந்
 தாமெய்துவார்
பேய்த்தானை யோடும் பொருந்தா னவர்தம்
 பெருங்கிரியை
மாய்த்தானை வள்ளிக்கு வாய்த்தானைக் காவி
 மலையனையே. சுO

---

யுடையவனாகிய திருமால்; முல்லைக்குரிய தெய்வம். 'மாயோன் மேய காடுறை உலகமும்' - தொல்காப்பியம். திருமாலைப் பரவும் ஓசை என்று சொல்லும்படியாக அவ்வெள்ளம் முல்லையைக் கடந்து மருதத்திற் கலந்தது. குல்லை, முல்லை முதலியன முல்லைக்குரிய கருப்பொருள்கள்.

பிரதியில் அரவமெனச் சொலப்பலன் கொள்மருதம் என்று காணப்படுகிறது.

சுO. போய்த்தான் ஐ நாழிகை : ஐ நாழிகை - அற்ப நேரமாவது. பொய் மருதம் சாய்த்தானை - ஆயர் பாடியிலே தன்னைக் கொல்வதற்காக மருதமரமாக வந்து நின்ற இரு அசுரர்களை முறித்துச் சாய்த்த கண்ணனாகிய திருமாலை. கற்பகக் காவானை - கற்பகச் சோலைக்குரியவனான இந்திரனை. போய் முருகனைச் சேவித்த பேர், அவ்விருவரையும்போல் பெருஞ் செல்வமெய்துவார்கள் என்க. பேய்த் தானையோடும் - அசுரப்படையோடு. பொரும் - போரிட்ட. தானவர்தம் பெருங்கிரியை - அசுரர் தலைவனான சூரபதுமன் எடுத்தமலைவடிவத்தை. மாய்த்தானை-பிளந்தவனை ; முருகனை.

# மருதம்

## சிந்து

மருத வனத்தில் ஓடுமாம் - கதிர்
தருத வனத்தை மூடுமாம்
வாழைக் குலையைத் தள்ளுமாம் - நெடுந்
தாழைக் குலையில் துள்ளுமாம்
கருது குளங்கள் நிரப்புமாம் - அவைக்
குரிய வளங்கள் பரப்புமாம்
காவிடங் கரை புரட்டுமாம் - சில
மாவிடங் கரை யுருட்டுமாம்
சருவி யனத்தை வெருட்டுமாம் - கரை
மருவி யநத்தை திரட்டுமாம்
சகலி திகைக்கச் சாடுமாம் - புன
லிகலை வகுக்கக் கூடுமாம்
செருவின் வன்பகை மாற்றியே - அரி
மருகன் முன்குடி யேற்றியே
தெய்வத் தலத்திந் திரனைப் பரவி
நெய்தல் நிலத்தில் அடைந்ததே. ௬௬

---

௬௬. கதிர் தரு தவனத்தை - கதிர்விட்டுப் பூத்த மருக் கொழுந்தை. கா இடம் - சோலையிடம். மா இடங்கரை - பெரிய முதலையை. சருவி - கொஞ்சிக் குலாவி. அன்னத்தை வெருட்டுமாம் - வெள்ள மிகுதியால் அன்னங்கள் வெருண்டு ஓட நேரும். கரை மருவிய நத்தை - கரையோரமுள்ள நத்தைகள். சகலி - ஒருமீன். புனல் இகலை - நீர் வந்து மோதுதலை. செரு - ஊடல்; மருதத்துக்குரிய உரிப்பொருள். பகை மாற்றி - ஊடலால் விளைந்த சிறு பகையைப் போக்கி. அரி மருகன் - முருகன். தெய்வத்தலம் - விண்ணுலகம். இந்திரன் மருதத்துக்குரிய தெய்வம்; 'வேந்தன் மேய தீம்புனல் உலகமும்' - தொல்காப்பியம்.

கலித்துறை

செந்தீ வரத்தியல் பாய்வருந் தீவினை தீர்த்தருள
வெந்தீ வரத்தில் எனதுமுன் னேகையில் வேலுங்கொண்டே
வந்தீ வரத்தி மகளார் வருடு மலர்ப்பதத்தை
இந்தீ வரத்திரு மாமலை மேவிய என்னையரே. கூஉ

## நெய்தல்

சிந்து

அடைந்த நெய்தலம் பூவையும் - இடை
மிடைந்த கைதையங் காவையும்
அளத்தி யர்உப்புப் பேட்டையும் - கரை
வலைச்சி யர்துப்பு வீட்டையும்
படர்ந்த புன்னையும் ஞாழலும் - கெடிக்
குடம்பை துன்னிய சூழலும்
பரவர் உணக்குஞ் சம்பையும் - அவர்
குரவர் வணக்கு கொம்பையும்

---

கூஉ. செந் தீ வரத்து இயல்பாய்-சிவந்த தீ வந்து பற்றிக் கொள்வதன் தன்மை யொத்து. வெம் தீவரத்தில் - மிக்க தீவிரமாக, வேகத்தோடு. வந்து ஈவர் - வந்து மலர்ப்பதத்தை அருள் செய்வார். அத்தி மகளார் - யானை மகளாகிய தெய்வ யானையம்மை. வருடும் மலர்ப்பதத்தை - வருடுகின்ற தம் திரு வடிகளை : அருள் செய்வார் என்பது கருத்து. இந்தீவரத் திரு மாமலை - குவளை வெற்பாகிய திருமலை. இந்தீவரம் - குவளை. என் ஐயர் - முருகர். இப்பாடல், திரிபு.

கூங. மிடைந்த - நெருங்கிய. கைதையங் கா - தாழை நிறைந்த அழகிய சோலை. அளத்தியர் - உப்பமைக்கும் பெண்கள். நெய்தல் நிலப்பெண்கள். பேட்டை - புறநகர் ; இங்கே உப்புப்பேட்டை என்பது உப்பளம். கரை வலைச்சியர்

இடந்தி கழ்உவ ரோடையும் - கடல்
குடைந்தி டும்அவர் ஆடையும்
எடுத்தி டும் வலை தோணியும் - அவர்
படுத்தி டுந் தல காணியும்
தொடர்ந்தலைக் கரம் வீசியே - இழுத்(து)
அடர்ந்த லைக்கடல் ஈசனைத்
தொழுது வணங்கி யிணங்கி யக்கடல்
அகடு கிழியப் புகுந்ததே. ௬௩

**கலிப்பா**

கந்தனே காவிமலைக் காங்கெயா அம்மையுமை
மைந்தனே மாயோன் மருகனே யென்றுசொல்வேன்
எந்தநே ரமும்பவத்துக் கிணங்கனே யாகிஉண்மை
யந்தநேர் பெற்றிடநா னல்லனே யானேனே. ௬௪

---

துப்பு வீடு - கரையில் வாழும் வலைஞர்குலப் பெண்களின் பொருள்கள் நிறைந்த வீடு. ஞாழல் - மரவகை. குடம்பை - பறவையின் கூடு. துன்னிய - நெருங்கிய. பரவர் - வலைஞர். உணக்கும் - உலரவைத்த. சம்பை : தட்டி கட்டுதற்குரிய ஒரு வகைப் புல். குரவர்-பரவரிற் பெரியராயுள்ளோர். வணக்கும்-கைவலைக்காக வளைக்கிற. இடந்திகழ் உவரோடை - எங்கும் பரவியுள்ள உப்பங்கழி. குடைந்திடும் - நீராடும். அலைக்கரம்-அலையாகிய கை. அடர்ந்து - நெருங்கி. கடல் ஈசன்-வருணன்; நெய்தல் நிலத்தெய்வம் ; 'வருணன் மேய பெருமணல் உலகமும்' - தொல்காப்பியம். அகடு - வயிறு. நெய்தற்பூ, கைதை, உப்புப்பேட்டை, வலைச்சியர், புன்னை, ஞாழல், உவரோடை முதலியன நெய்தலுக்குரிய கருப்பொருள்கள்.

௬௪. என்று சொல்வேன் - என்று துதிப்பேன். பவத்துக்கு இணங்கனேயாகி - பிறவிக்கு இணங்குபவனேயாகி ; இணங்கன் - நண்பன். உண்மையந்தநேர் பெற்றிட-உண்மை நிலையாகிய அம்முத்தி நிலைபெற. அல்லனே யானேன் - விருப்பமில்லாதவனானேன். ஆகி, அல்லன் என்பது முரண்.

# ஆற்று வெள்ளம்

சிந்து

மன்னும் அனுமப் பெயர்ப டைத்திடும்
நன்ன திப் புனல் மீனெலாம்
    மதுரை யாற்றினில் அமணர் விட்டபொய்
    யதுரை யேடெனச் சாயவே
இன்ன திப்புனல் புகுந்த கடலில்
துன்னி எதிர்க்கும் மீனெலாம்
    எமது ஞான போனகர் விடும்
    ஏடெ னக் குதித் தேறவே
சென்னி ஆறுடைக் குமர நாயகன்
முன்னம் அவுணர் மடியவே
    சீறி ஏவிடும் அம்பெ னக் கதி
    மீறி யோடிய வாரிநீர்

---

கூரு - கூஅ. ஆற்றுப் பெருக்கைப் பள்ளியொருத்தி பிற பள்ளியருக்குக் காட்டுகிருள்.

கூரு. அனுமப் பெயர் நன்னதி - அனுமநதி ; நன்னதி எனவும் வழங்கும் ; 'நானிலம் புரக்கும் நன்னதியாளன்' : திருமலைக் குறவஞ்சி சக. சம்பந்தரோடு வாதம் செய்து சமணர் நீரில்விட்ட ஏடுகள் வைகையாற்ருேடு போனதுபோல, வெள்ளத்தின் வேகத்தினுல், மீனினம் யாவும், ஆற்ருேடு அடித்துக்கொண்டு போகப்படுகின்றன. பொய்யதுரை-பொய்யுரை. இன்னதி - இனிய நதி. ஞானபோனகர் - சமபந்தர் ; 'மெய்ஞ் ஞானமாம் போனகம் பொற்குன்ற - மங்கை செங்கையால் ஊட்டஉண் டருளிய மதலையார்' - சேக்கிழார். கடல்மீன் நீரில் சம்பந்தர் விட்ட ஏடுபோல் எதிரேறி வருகிறது. ஆறு முகனை குமரன் அவுணர் மடியவிட்ட அம்பு ஓடியதுபோல, மழை நீா கரைகடந்து மீறி ஓடிவருகிறது.

அன்ன வயலுங் குளமும் நிரப்பித்
தென்னன் முனம்அங் கயற்கண் ணாள்
அன்ப னார்விடும் புரவிபோல் வரும்
அழகு பாரும் பள்ளீரே. ௬௫

## மீன் வகை

சுறவு மசறி கொளுவை யுளுவை
கூடை திருக்கை விரிசிருச்
சூரை மயிலை யயிரை மணலி
பாரை மகர முள்ளிருல்
குறவை முறல்வெங் கணைக ருங்கணி
குறளி செங்கணி திமிங்கிலம்
கோளை சாளை தேளி மூளி
குதிப்புத் திமிலை பஞ்சிலை
பறவை கெளிறு மலங்கு கலவாய்
பருத்த காரை யாரல்மீன்
பன்றி வாளை யாற்று வாளை
பரக்கு மைந்திணை நிரக்கவே
நறவு கமழுங் குவளைக் குன்றுறை
நாயகன் மயில் வேகம்போல்
நடக்கும் அனும நன்னதிப் புனல்
முழக்கம் பாரும் பள்ளீரே. ௬௬

---

௬௫. அங்கயற்கண்ணாள் - மதுரை மீனாட்சியம்மை. அன்ன வயல் - நெல் வயல். தென்னன் - பாண்டியன். அன்பனார் - சோமசுந்தரக் கடவுள். விடும் புரவிபோல் வரும் அழகு : மாணிக்கவாசகருக்காகச் சோமசுந்தரக் கடவுள் பாண்டியன் முன் குதிரைகளைக் கொண்டுவந்து நடத்திக் காட்டிய அழகுபோன்றது வெள்ளம் வரும் அழகு.

௬௬. சுறவு முதல் ஆற்றுவாளை வரையுள்ளவை மீனினத்தின் பெயர்கள். பரக்கும் ஐந்திணை நிரக்கும் - விரிந்த ஐந்திணை நிலங்களிலும் கலந்து. நறவு - தேன்.

## பொருள் வகை

### சிந்து - வேறு

சங்கரன் செட்டி பருத்தியும் - கட்டை
ரெங்கயன் பட்ட விருத்தியும்
    தட்டான் மிளகன் படுகையுங் - குறுக்
    கிட்டா னழகன் கடுகையும்
கங்கன் கட்டிய நெல்லையும் - வலைப்
புங்கன் வெட்டிய வல்லையும்
    கண்டன் முத்திரிக் கல்லையும் - மொட்டைக்
    கொண்டன் கத்திரிக் கொல்லையும்
சிங்கக் கோன்பட்டி யாட்டையும் - வெள்ளை
அங்கக் கோன்குட்டிக் கூட்டையும்
    சேணியர் மடச் சாலையும் - இலை
    வாணியர் கொடிக் காலையும்
வெங்கல னிட்ட தோப்பையும் - பறைச்
சங்கிலி நட்ட கேப்பையும்
    மேட்டினிற் செங்கல் மாலையும் - தொடுத்
    தாட்டிய சங்கன் ஆலையும் ; கூஎ

---

கூஎ. சங்கரன்செட்டி, ரெங்கயன், மிளகன், குறுக்கிட்டா னழகன், கங்கன், புங்கன், கண்டன், கொண்டன், சிங்கக் கோன், அங்கக்கோன், வெங்கலன், சங்கிலி, சங்கன் என்பன மக்கட் பெயர்கள். பட்டவருத்தி - ஒரு புலத்தின் பெயர். மிள கன் படுகை - மிளகன் என்பவன் பயிரிட்ட படுகை. வல்லை - மேட்டை. முத்திரிக் கல் - முத்திரை போட்ட எடை கல். சேணியர் - நெசவாளர். மடச்சால் - சாயம் வைத்துள்ள சால். இலைவாணியர் - வெற்றிலை பயிர்செய்து விற்போர். கொடிக்கால் - வெற்றிலைத் தோட்டம். கேப்பை - கேழ் வரகு. மாலை - வரிசைகளை. ஆலை - கரும்பாலை.

அல்லி பீற்றல் வீட்டையும் - தெற்றுப்
பல்லி நூற்ற ராட்டையும்
அளையிற் படுக்கும் பாம்பையும் - பொய்கை
இடையில் அடுக்குஞ் சேம்பையும்
செல்லி வளர்க்கும் கோழியும் - குறி
சொல்லி யுழக்கும் நாழியும்
தேவி வடிச்ச பானையும் - மூளி
ஆவி பிடிச்ச மீனையும்
வல்லி யரைக்கும் மணையையும் - ஈரங்
கொல்லி வெளுக்கும் துணியையும்
வெண்டி மச்சினி பொட்டியும் - அவள்
நண்ட விச்சிடு சட்டியும்
வல்லை சுருட்டி வாரி மறித்தவ்
வெல்லை பரந்து பகிரதன்
வரந தியெனும் அனும நன்னதி
வருதல் பாரும் பள்ளீரே. கூஅ

---

கூஅ. முந்திய பாடலில், ஆடவர் உடைமைகளை ஆறு அடித்துச் சென்றமை கூறினர். இப்பாடலில் பெண்டிர் உடைமைகளைக் கூறுகிறார். அல்லி, பல்லி, செல்லி, குறி சொல்லி, தேவி, மூளி, வல்லி, கொல்லி, வெண்டி ஆகியோர் பெண்கள். பீற்றல் வீடு - பழைய வீடு. ராட்டை - ராட்டினத்தை. அளை - வளை. சேம்பு-சேப்பங்கிழங்கு. குறிசொல்லி-குறி சொல்பவளுடைய. நாழி - படி. வடிச்ச - வடித்த. ஆவி பிடிச்ச - ஆவியிலே வேகவைத்த. மணை - அரிவாள்மணை. ஈரங்கொல்லி - வண்ணாத்தி. பொட்டி - பெட்டி. அவிச்சிடு - அவித்திடுகின்ற ; சமைக்கிற. வல்லை - விரைவாக. பகிரதன் வரநதி என்னும் - வரத்தினல் பகீரதன் கொண்டுவந்த கங்கையாறென்று சொல்லத்தக்க.

## பண்ணைக்காரன் வரவு

### கலிப்பா

அண்ணைப் படையான்முத் தையன் திருமலையான்
பண்ணைப் பருவம் பலகாலும் பார்க்கவல்ல [கும்
மொண்ணைப்பண்ணை யானிரண்டு முட்டிதட்டுங் காலிழுக்
சண்ணைநடை யோடுந் தடியோடும் வந்தானே. ௬௬

### சிந்து

வெட்டையாய் மினுமினுத்த
தட்டைத் தலையும் - செம்பட்டை
மீசையும் பச் சோந்திக் கரை
வாசி நடையும்
முட்டிக் காலுஞ் சில்லொலுங்கு
விட்டுப் போகாப் பொட்டைக் கண்ணும்
மூளிக் காது மாய் வளர்ந்த
நாளிப் போழ்வாயும்

---

௬௬. அண் ஐ படையான் - பொருந்திய அழகிய படையாகிய வேலையுடைய முருகன். மொண்ணை - வழுக்கைத்தலையான். சண்ணை நடை : தின்று கொழுத்தவன் நடை.

௭௦. வெட்டை - வழுக்கை. பச்சோந்தியின் நடைக்கு அரைவாசி நடையும் என்க ; அவ்வளவு விகாரமான நடை. சில் ஒலுங்கு - சில ஒலுங்கு ; ஒலுங்கு - பெருங்கொசுகு. பண்ணைக்காரன் கண்ணிலே வடியும் பீளையில் எந்நேரமும் கொசுகு மொய்த்துக்கொண்டிருக்குமாம். நாளி - கள். போழ்வாய் - திறந்த வாய். இவன் அழகைப் பார்க்கும்போது, விகாரமான ஒட்டகம் கட்டழகுடையதென்று சொல்லலாமாம்.

ஓட்டகம் இவரால் நல்ல
கட்டழகு பெற்ற தென்றால்
ஒன்றை யொன்றைச் சொல்வதென்ன
நன்றி தென்னவே
வட்ட வாவிக் காவித்திரு
மாமலைக் கந்தர் பண்ணைக்கு
வாய்த்த பண்ணைக் காரர் வந்து
தோன்றி னாரே. ௭௦

## பள்ளர் வணங்குதல்

சிந்து - வேறு

சுண்டல்முகப் பொட்டைக் கண்ணைக்
கும்பிடுகிறோம் - சாடி
சொல்லத் துடிக்கும் போழ்வாயைக்
கும்பிடுகிறோம்
தெண்டுபோ லாட்டுந் தலையைக்
கும்பிடுகிறோம் - இஞ்சி
தின்றகுரங் கொத்தவரைக்
கும்பிடுகிறோம்
குண்டுசட்டி வயிற்றாரைக்
கும்பிடுகிறோம் - பருங்
கோழியும் அவலும் வைத்துக்
கும்பிடுகிறோம்
பண்டைப்பழிப் புள்ளவரைக்
கும்பிடுகிறோம் - பண்பைப்
பண்ணைக் கார நயினாரே
கும்பிடுகிறோம். ௭௧

---

௭௧. சுண்டல் முகம் - வற்றிச் சுருங்கின தோலுடைய முகம். சாடி சொல்ல-சாடையாய்க் குத்திச் சொல்ல. தெண்டு போல் - ஓணான்போல. பண்டைப் பழிப்பு - பழமையைக்

## பண்ணைக்காரன் செயல்

### சிந்து - வேறு

பள்ள னெங்கே மூத்த பள்ளி
கள்ளி என்பாராம் - சின்னப்
பள்ளி விசு வாசி சுத்த
வெள்ளை என்பாராம்
மெள்ளக் கடைக் கண்ணுற் பள்ளி
துள்ளு குட்டி கொங்கையுங் - கை
வீச்சையுஞ் சாய்த்துப் பார்த்தேங்கி
மூச்செறி வாராம்
புள்ளி யணைஞ் சான் கொழுந்தி
தள்ளி நிற்பா யென்பாராம் - பெருள்
பூலி யோ வா சாலி யனு
கூலி என்பாராம்
கள்ள ருந்தி ஞற்போற் சீறித்
துள்ளிக் கொள்வாராம் - கோழை
கக்கும் பண்ணைக் காரர் கொன்னை
விக்கல் வாயாரே. எஉ

---

காட்டிப் பழித்தல். பள்ளர் கும்பிட்டு வணங்கும் பாட்டிலே பண்ணைக்காரனை ஏளனம் செய்வதே பள்ளுப் பாட்டின் மரபாயிருக்கிறது.

எஉ. சுத்த வெள்ளை - தந்திரம், ஏமாற்றுதல் அறியாதவள். புள்ளி யணைஞ்சான் கொழுந்தி - பள்ளருட் சிறந்தவனை அணைஞ்சான் என்பவன் கொழுந்தியைப் பார்த்து. பூலி : ஒருத்தி பெயர். வாசாலி - வாக்குத் திறமையுடையவள். அனுகூலி - அனுகூலமா யிருப்பவள். கொன்னை - திக்கிப் பேசுதல்.

கலிவிருத்தம்

கொடுப்பரோ கதிவினைக் குழியில் வீழ்ந்திடா(து)
எடுப்பரோ பிறக்கவும் இறந்து போகவும்
விடுப்பரோ அந்திய வேளைக் காலனைத்
தடுப்பரோ காவிப்பூஞ் சைல நாதரே. எங

## பண்ணைக்காரன் கூறுதல்

சிந்து

சேலலையும் வளவயலில் ஏர்நடத்துங் காலம்
செறிந்தகுளங் காலணைகள் சீர்படுத்துங் காலம்
சாலிவிதை தொளிகலக்கிப் பாவுதெளி காலம்
சனங்கள்அதி காலமெழுந் தாளேவுங் காலம். எச

காற்புரவுங் குளப்புரவும் பயிரேற்றுங் காலம்
கரும்பரம்பைப் பருவம்பார்த் திதம்புரியுங் காலம்
நாற்புவியில் இரண்டுசெய்யுஞ் சீர்படுத்துங் காலம்
நமக்கிரண்டு செயுங்குடும்பன் முளைத்தகலி காலம். எரு

---

எங. கதி கொடுப்பரோ. அந்திய வேளை - மரணம் நேரும்போது. காவிப் பூஞ் சைலம் - குவளைமலை.

எச. சேல் அலையும் - சேல் மீன்கள் துள்ளி விளையாடுகின்ற. கால் அணை-வாய்க்காலிலுள்ள மடை, மதகு முதலியன. தொளி - சேறு ; சேறு கலக்கிச் சாலிவிதையைப் பரவும்படி தெளிக்கும் காலம். எழுந்து ஆளைவேலைக்கு ஏவுங்காலம் என்க.

எரு. கால் புரவு - வாய்க்கால் பாசனமுள்ள வயல். குளப் புரவு - குளநீர்ப் பாசனமுள்ள வயல். பரம்பு - புன்செய் நிலம். கரும்பரம்பு-கரிசல் காடு. இதம் புரியும் - பக்குவம் பார்த்து உழுது பயிர்செய்வதற்கேற்ற. நாற்புவி - நானிலம் ; குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நான்கும்

தனியரக்குக் குடியுமவன் தனக்கிரண்டு குடியும்
தனிக்குறும்பும் என்னிலவன் நமக்குவளை வானே
அனமிருக்கும் வயற்பண்ணைப் பதிமூத்த பள்ளி
அல்லவழிப் பள்ளன்வரச் சொல்லடி நீயே. ௭௬

அறுசீர் விருத்தம்

நாம்பால் இருக்க வேம்பருந்தி
நடப்பால் வதைக்குஞ் சஞ்சிதநோய்
சோம்பால் மெலிந்தோம் நமரங்காள்
தொழும்பா லுயலாம் தொழுவாரீர்
காம்பா லெனுந்தோள் அதரநறுங்
கரும்பார் அமுதக் களபமுலைத்
தீம்பால் அயின்ருன் திருமலையே
தென்பாற் கயிலை மலையாமே. ௭௭

---

உடைமையால். இரண்டு செய்யும்-நன்செய்யும் புன்செய்யும். இரண்டு செயும் - துரோகம் செய்யும். கலி : கொடுமை என்ற குறிப்பு.

௭௬. அரக்குக்குடி-நாட்டுக் கள்ளில் ஒருவகை. இரண்டு குடியும் - இரு மனைவியரும். நமக்கு வளைவானே - நமக்கு உடல் வளைந்து வேலை செய்வானே. அனம் - அன்னம். மூத்த பள்ளி : விளி. அல்லவழிப் பள்ளன் - நல்லதல்லாத வழியில் ஒழுகும் பள்ளன்.

௭௭. சஞ்சித நோய் - பிராரப்தம், சஞ்சிதம், ஆகாமியம் என்னும் மூவகைக் கன்மங்களில் ஒன்று ; அநாதியாய் ஈட்டப் பட்டுள்ள கன்மத்தில் அனுபவித்துத் தீர்ந்தது போக எஞ்சி நிற்பது. சோம்பால் மெலிந்தோம்-சஞ்சித நோயைப் போக்க முயலாதபடி நம்முடைய சோம்பல் காரணமாக வருந்தினோம். நமரங்காள் - நம்மவர்களே. தொழும்பால் - தொண்டினாலே. உயலாம் - உய்யலாம் ; தொழ வருவீர்களாக. காம்பு தோளுக்கு உவமை. காம்பு எனுந் தோள் - காம்போ என்னத் தக்க தோளையுடைய. ஆல், அசை. அதரம் - இதழ். அதரம்

## மூத்த பள்ளி முறையிடுதல்

### சிந்து

எனைவந்து கேட்டீர் - நம்புவி
தனிவிந்த நாட்டீ - ரலவோ
எள்ளுமப் படியே - நீர்தரும்
பள்ளுமப் படியே
மனமஞ்சி நடவான் - எவருக்கும்
வினயஞ்செய் திடுவான் - பணங்கொண்டு
வசியங்கள் பிடிப்பான் - பொல்லாச்
சதியன்கள் குடிப்பான்
குனிசிலை வணக்கம் - எனஇவன்
இனிமைசெய் யிணக்கம் - உறவென்று
குறித்தீர் முறையோ - நாள்தொறும்
பொறுத்தீர் பொறையோ
தினமுஞ்செய் மதமே - அவன் செய்தீ
மனமுஞ்சம் மதமே - உமக்கெனிற்
சீறுவ தெனையோ - விடுமென்ன
கூறுவ தினியே. எஅ

---

நறும் கரும்பாகவுள்ள கார்த்திகைப் பெண்கள், கரும்பார். அவர்களுடைய களப முலைத் தீம்பாலை அயின்றான். அயின்றான் - உண்டவனான முருகன். திருமலையே தென்பாற் கயிலை என்னத்தக்கது (௫௨).

எஅ. கேட்டீர் : ‘ சொல்லடி நீயே ’ (எசு) என்று பண்ணைக்காரன் மேலே கேட்டான். எள்ளுமப்படி : ‘ எள்ளுமப் படி பள்ளுமப்படி ’ என்பது பழமொழி. வசியங்கள் - வசிய மந்திரம். சதியன் கள் - வஞ்சனை செய்கின்ற கள்ளை. குனி சிலை வணக்கம் - வில்லை வளைப்பதுபோல. இணக்கம்-அன்பு ; வளைந்த வில் நிமிர்ந்து அடிப்பதுபோல, இவன் அன்பும் கொடுமைக்கு அறிகுறியாகும். பொறை-பொறுமை. தீமனம்-

வெறுப்புக் கண்டேங்கி - மாமிக்கோர்
கறுப்புக் கண்டாங்கி - கொடுத்தவள்
விருந்திட்ட கறிசோ(று) - உண்டவள்
மருந்திட்ட தறியான்
சிறப்புடன் நாளும் - பால்மெத்தக்
கறப்பினும் வாழும் - வீட்டினைத்
தினம் பொறுப் பாரோ - ஆங்கது
தனைச் செறுப் பாரோ
புறப்பட்டுத் திரிந்தான் - விதைநெல்லைத்
திறப்பிட்டுச் சொரிந்தான் - என்னுடன்
போட்டிக்குத் தொடுத்தான் - மச்சினி
கோட்டிக்குக் கொடுத்தான்
குறப்பையல் பாம்பன் - உறவுகொண்(டு)
அறப்பயில் வீம்பன் - அவனொடுங்
குரண்டைகள் பிடிப்பான் - கேளா
முரண்டன்காண் ஆண்டே. எகூ

---

தீமானம் ; மானக்கேடான செயல். சீறுவது எனையோ : அவன் தினமும் செய்யும் மதம் பிடித்த செயலும் தீமான மான் செயலும் சம்மதம் உமக்கு என்றால், என்னைக் கோபிப் பானேன். விடும் - பேச்சை விட்டு விடும்.

எகூ. மாமி - இளைய பள்ளியின் தாய். கண்டாங்கி - சேலை. பால் மெத்தக் கறப்பினும் வாழும் வீட்டினைத் தினம் பொறுப்பாரோ : ' பழகப் பழகப் பாலும் புளிக்கும் ' என்ற பழமொழியைக் காண்க. செறுப்பாரோ - கோபிப்பாரோ. திறப்பிட்டு-சாவி போட்டுத் திறந்துவிட்டு. சொரிந்தான் - சொரிந்தெடுத்துக் கொடுத்துவிட்டான். மச்சினி கோட்டிக்கு- இளையவள் விளையாட்டுக்கு. குறப்பையல் பாம்பன் - பாம்பன் என்ற குறவன். அறப் பயில் வீம்பன் - வீம்பையே முற்றி லும் பயில்பவன். அவனொடும் - அந்தப் பாம்பனோடு. குரண்டை - ஒரு பறவை. முரண்டன் - வம்பன்.

துடுக்குறு பேச்சோ - துப்பட்டி
இடுக்குகை வீச்சோ - அவகுணச்
சுயபுத்தி மிண்டோ - ஒரு சற்றும்
பயபத்தி யுண்டோ
அடுக்கவும் ஆமோ - அவளைக்கைப்
பிடிக்கவும் போமோ - வரிசைக்கே
ஆடியு மிட்டீர் - கனபகை
தேடியும் விட்டீர்
கடக்கவுங் கேட்டீர் - இவனையோ
அடக்கவும் மாட்டீர் - நம்பண்ணைக்
காரியம் பாரீர் - அவன்செய்யும்
வீரியந் தீரீர்
படிற்றுரை யலவே - நாளஞ்சு
பிடித்திடுஞ் சொலவே - கேளும்போய்
பள்ளத்தி இளையாள் - சொல்லுவள்
உள்ளத்தை ஆண்டே. ௮௦

---

௮௦. துடுக்குறு - துடுக்கான. அவகுணம் - தீக்குணம். மிண்டோ - வலியோ. 'சற்றும் பயபக்தி இல்லை' என்பது வழக்கு. கைப்பிடிக்க - மணஞ் செய்ய. வரிசைக்கே - அவ் விளையவள் இனத்தாருக்குரிய சிறப்புக்களுக்காகவே. ஆடியும் - ஆடம்பரமாக உதவியும். வீரியம் - வீரமான கெட்ட காரியம். படிற்றுரை - பொய்யுரை, வஞ்சனை. நாள் அஞ்சு பிடித்திடும் சொல - ஒருநாளில் அவனுடைய காரியத்தைச் சொல்ல முடியாது, சொல்ல ஐந்து நாள் பிடிக்கும். கேளும் போய் - போய் இளையவளைக் கேளும். உள்ளத்தை - உண்மையை. என்னுரை படிற்றுரை என்று கருதினீரானால், அவளைக் கேட்டுப் பாரும்; அவளிடம் உண்மை வராதென்பது கருத்து.

அறுசீர் விருத்தம்

ஓலை எழுத்தை யழிப்பர்தலை
யோட்டி லெழுத்தினை யாரழிப்பார்
வேலை எனக்குப் பிறந்திறக்க
வேலை யுனக்குப் படைத்திடவோ
கோலை யுரத்தில் அடித்தேவல்
கொள்வார்க் கன்றிச் செய்வார்க்கென்
வாலை யொருத்தி பெற்றதிரு
மகனே காவி மலையானே. அக

## இளைய பள்ளியைக் கேட்டல்

சிந்து

மன்னுபுகழ் நன்னகரப் பள்ளி - உன்னுடைய
மணவாளக் குடும்ப னெங்கே கள்ளி
புன்னகையும் மாய்மாலப் பேச்சும் - மனக்களவும்
போட்டுவிடு கூட்டமிட வேண்டாம் :

---

அக. ஓட்டில் எழுத்தினை யாரழிப்பார் : 'மாமயிலோன் கால்பட்டழிந்தது இங்கு என் தலைமேல் அயன் கை யெழுத்தே' - கந்தரலங்காரம். நான் பிறந்து கொண்டே யிருக்க, நீ படைத்துக்கொண்டே யிருந்தால் மட்டும் போதாது ; என்னைத் துன்புறச் செய்தாயினும் ஆட்கொள்ள வேண்டும் என்று வேண்டுகிறார். உரத்தில் - மார்பில் ; அதாவது உடலில். வாலை - சத்தி (பால்யா) ; உமாதேவியார்.

அஉ. இதில் முதற்பாதி, பண்ணைக்காரன் கூற்று, பிற்பாதி இளையபள்ளி கூற்று. மணவாளக் குடும்பன் - காதல் நாயகனை குடும்பன். மாய்மாலப் பேச்சு - பாசாங்கு நிறைந்த பேச்சு. மனக்களவு - மனத்திலுள்ள கபடம்.

## அவள் கூறுதல்

என்னுடைய நயினாரே கேளீர் - ஆண்டவர்தம்
　　இனியபேர் பெற்றபண்ணைக் குடும்பன்
கன்னங்கறே ரெனுமிருட்டில் எழுந்தே - சேல்பாயுங்
　　கால்வாயிற் போனான்காண் ஆண்டே. அஉ

போனபள்ளன் வரவுநான் காணேன் - நேற்றிரவு
　　புளிச்சகஞ்சி இவ்வளவுங் குடித்தான்
ஈனமிரக் கஞ்சிறிதும் இல்லாள் - மூத்தவள்கை
　　எடுத்ததெய்வந் தடுத்ததடை யறியேன்
ஆனாலும் நானடியாள் தேடிப் - போகவெனில்
　　ஆழங்கால் ஆளிறங்கா நீச்சே
சோனைமழைக் காலிருட்டும் ஆச்சே - பாவிமனந்
　　துடித்துப்பர தவிக்கிறேன் ஆண்டே. அங

---

போட்டுவிடு - விட்டுவிடு. இனிய பேர் பெற்ற குடும்பன் திருமலைக்குடும்பன் ; பள்ளன் பெயர் சொல்லக்கூடாதென்று இவ்வாறு சொல்லுகிறாள்.

அங. புளிச்ச - புளித்த. இவ்வளவு : மிகச் சொற்பம் என்பது கருத்து ; 'இம்மட்டுந் தந்தான்' - முக். கருக. ஈனம்- அவமானம். கைஎடுத்த-கையெடுத்துக் கும்பிட்ட. ஆழங்கால் ஆள் இறங்கா நீச்சே - கால்வாய் மிக்க ஆழமுடையது, நீச்சுக்கு ஆள் இறங்க இயலாது ; ஆகவே நான் தேடிப் பார்க்க முடியவில்லை என்பது கருத்து. சோனை மழை - விடாது பெய்யும் பெருத்த மழை ; 'சிலை மா மேகம் சோனைபட' - கம்பராமாயணம். பாவி - பாவியாகிய நான்.

இரைத்துவரும் அனுமநதிப் பெருக்கில் - துடிதுடித்தங்(கு)
எண்ணுமைற் போயிறங்கி னானே
மரைப்பிணவை நிறுத்துதலை யணையிற் - பாசிபற்றும்
வழுவழுக்கில் சறுக்கிவிழுந் தனனே
தரைத்தலத்தைக் கிழிக்கும்புன லுடைப்பில்-குதிரைவிட்ட
தறிமிதித்துச் சறுக்கிவிழுந் தனனே
அரைப்பொழுதும் பசிபொறுக்க மாட்டான்-இன்னமுங்கள்
அடிமைவரக் காணகிலேன்நான் ஆண்டே. அச

கிடையாத நற்கனவு கண்டேன் - முருங்கையடிக்
கெவுளிசொன்ன குறிக்கும்நன்மை யுண்டே
உடையாளென் நாத்திதும்மல் பொன்னே-இடும்பனுக்கோர்
உருமாலை நேர்ந்துருகிச் சொன்னேன்

---

அச. இரைத்து - பேரொலி செய்து. மரைப் பிணவு - பெண்மான். தலையணை : ஆற்றின் உற்பத்தி ஸ்தானத்தருகே கட்டிய முதல் அணை. பாசி பற்றும் - பாசி பிடித்த. காட்டு மான் முதலியன, முதலணையைக் கடந்து வராமல் நின்று விடும் ; அவ்வணையில் இவன் சறுக்கி விழுந்தானே. தரைத் தலம் - பூமி. குதிரை விட்ட தறி - குதிரைத்தறி ; நீரின் உடைப்பை அடைப்பதற்காக வைக்கோல் முதலியவற்றை வைத்து நிறுத்திய மரச்சட்டம் ; 'படுங்குருதிக் கடும்புனலை யடைக்கப் பாய்ந்த - பல குதிரைத்தறிபோன்ற பரிசு காண் மின்' - கலிங்கத்துப்பரணி, சகூஉ ; குதிரைத்தறியனார் என்பது சங்கநூற் புலவர்களுள் ஒருவர் பெயர். அரைப்பொழு தும் பசி பொறுக்கமாட்டான் என்பதிலே தன் அன்பையும் கவலையையும் காட்டுகிறாள். அடிமை : என் நாயகனான பள்ளன்.

அரு. முருங்கை யடி - முருங்கை மரத்தினடியிலே யிருந்து. நாத்தியின் பெயர் உடையாள் ; அவள் தும்மல்

கடைபோகக் குற்றமுலர் காப்பார் - நம்முடைய
காவிமலைத் தெய்வமுண்டு கண்டீர்
சடையாமல் வீட்டிலே போம்போம் - பொழுதடையுஞ்
சமயமிங்கு வாரும்நயி னாரே. ௬௫

அறுசீர் விருத்தம்

விடங்கள் மாற்றிட மயிலுண்டு வேலுண்டு
வினைப்பகை தனைத்தீர்க்கச்
சடங்க ளெய்திடா தாண்டிடத் திருத்தண்டைத்
தாட்டுணை நமக்குண்டே
இடங்கள் தோறும்வே யீன்றமுத் திளநிலா
எறித்திடுஞ் செழுங்காவித்
தடங்கள் மேவிய திருமலை வலம்வரச்
சடுதியில் வருவீரே. ௬௬

---

எப்போதும் நல்ல பலனைத் தருமாதலால் பொன் போன்றது. இடும்பன் - இடும்பன் என்ற தெய்வம். நேர்ந்து - தருவதாக வேண்டிக்கொண்டு. கடைபோக - இறுதிவரையில். சடையாமல் - சோர்வுறாமல். பொழுதடையும் சமயம் - மாலை நேரம்.

௬௬. மாற்றிட மயிலுண்டு, தீர்க்க வேலுண்டு. சடங்கள் - உடல்கள்; அதாவது பிறவி. ஆண்டிட, தண்டையணிந்த இரண்டு திருவடிகள் உண்டே. வேய் - மூங்கில், முத்துப்பிறக்கும் இடங்களில் வேயுமொன்று. தடங்கள் - தடாகங்கள்.

## பண்ணைக்காரன் கோபித்தல்

### சிந்து

கட்டாக நன்னகர்ப் பள்ளத்தி இவ்வாறு
கூறியே - நிற்கக்
கண்டிடுங் கிந்துக் கால்பண்ணைக் காரன்மெத்தச்
சீறியே
தொட்டால்வி டாதென்கை நாங்குக் கம்புகொல்லும்
பேயடி - உண்ட
சோற்றுக்கு ரெண்டுசெய் தாலது வேசுடுந்
தீயடி
கொட்டாம லேபிள்ளைப் பூச்சியும் ஆயினேன்
நானடி - காட்டிற்
கூழை நரியைக் குளிப்பாட்ட வல்லாய்நீ
தானடி
தட்டா னுறவுபோல் வந்துற வாடின
பள்ளத்தி - இந்தத்
தஞ்சாவூர்ச் சாலமெங் கேபடித் தாய்முழுக்
கள்ளத்தி. அஎ

---

அஎ. கட்டாக - திறமையாக. கிந்துக் கால் - நொண்டு கின்ற காலையுடைய. நாங்கு - ஒருமரம். என்கையிலே நாங்குக் கம்பை எடுத்தேனானால் பேய்போல் அடிப்பேன். உண்ட சோற்றுக்கு இரண்டு செய்யலாகாது, கொட்டினால் தேள் கொட்டாவிட்டால் பிள்ளைப்பூச்சி என்பன பழமொழிகள். கூழை நரி - வால்குட்டையான நரி. தட்டான் உறவு பொன்னுக்குச் சேதம் என்பது வழக்கு.

பேச்சிநம் பண்ணையிற் பள்ளிக்குக் கூற்றுவ
ளனநீ - ஐயன்
பேர்பெற்ற பள்ளனைப் பெயர்க்கும் ருத்திராக்கப்
பூனைநீ
வாச்சிக் கல்லாது மரக்கணுத் தீரா(து)
இடும்பிச்சி - பொல்லா
வண்ட முறியனு மானாய் இளைய
குடும்பிச்சி. அஅ

வாயிற் பகட்டுஞ் சவலச் சமத்தும்
நடக்குமோ - பிற
வாப்பிள்ளை யைநிண வாக்கட்டி லேற்றில்
கிடக்குமோ
தீயிற் பயிரிட்டாற் காய்கதி ராய்வந்து
காணுமோ - உன்றன்
சின்னப் பேச்செல்லாம் விடுவிடு பொல்லாப்பு
வேணுமோ. அகூ

அஅ. பேச்சி - பேய்ச்சி. பண்ணையிற் பள்ளி - மூத்த பள்ளி. கூற்றுவன் - அவள் வாழ்வைக் கெடுக்கின்றமையால் யமன் போன்றவள். ஐயன் பேர்பெற்ற பள்ளன் - திருமலைப் பள்ளன். பெயர்க்கும் - அவன் அன்பைப் பெயர்க்கும். உருத்திராக்கப் பூனையின் கதை எல்லோரும் அறிந்தது. மரக்கணுவை வாச்சி என்ற கருவியைக் கொண்டுதான் சேதிக்க முடியும்; 'மரக்கணு வாச்சிக்குத் தீரும்' - முக். கூ0. இடும்பிச்சி - கொடுமை செய்பவள். வண்ட முறியன் - கொடிய நோய். வண்டர்-கொடியவர்; 'வண்டர் மும்மதில் மாய்தர எய்தவன்'-தேவாரம். முறியன்-பயிருக்குவரும் ஒருவகை நோய்.

அகூ. பகட்டு - வஞ்சகம். சவலச் சமர்த்து-சிறுபிள்ளைத்தனமான சாமர்த்தியச் செயல். நிணவாக் கட்டில் - நார் முதலியவற்றால் பின்னிச் செய்யப்பட்ட கட்டில்; 'கட்டில் நிணக்கும் இழிசினன்' - புறநானூறு அஉ. காய் கதிர் - காய் அடர்ந்த கொத்து.

கொச்சைப் பட்சாதிக் கடியன்றிச் செம்மை
அடுக்குமோ - கெஞ்சிக்
கொண்டு மயிலை யொருதூவல் கேட்டாற்
கொடுக்குமோ
பச்சைப் புளியாக்கித் தின்னவேண் டாம்வண்டக்
குள்ளத்தி - உன்றன்
பள்ளனை இக்கணம் கூப்பிடு நன்னகர்ப்
பள்ளத்தி. ௬௦

## பள்ளன் வெளிவருதல்

இவ்வண்ண மேபண்ணைக் காரனுஞ் சிக்கெனப்
பண்ணினான் - இனி
ரெண்டில் லொன்றுகண் டாலன்றிப் போகானென்
றெண்ணினான்
கைவண்ணக் கம்பு மறுதாறு மாய்வந்து
சொல்லுவான் - பண்ணைக்
காரனைக் கும்பிட்டுப் பள்ளனும் பேச்சினால்
வெல்லுவான். ௬௧

---

௬௦. பட்சாதி - பள்ளர் சாதி. அடி : உன்னை அடிக்க வேண்டுமே யொழிய, நல்ல முறையிலே உன்னோடு பேசுவதிற் பயனில்லை. 'அச்சமே கீழ்ச்சாதிக் காசார மென்பார்கள் ஆருமே' என்று மேலே பள்ளன் கூறுவதைக் காண்க (௧௦௩). தூவல் - இறகு. 'மயிலே மயிலே இறகு கொடு என்றால் கொடுக்காது' என்பது பழமொழி. வண்ட - தீய.

௬௧. பள்ளன் எண்ணினான், வந்து சொல்லுவான், வெல்லுவான். கைவண்ணக் கம்பு - கையிலுள்ள சாட்டைக் கோல், மறுதாறு - வேட்டியைச் சோமக் கட்டாகக் கட்டிய கட்டு. இளைய பள்ளியைப் பண்ணைக்காரன் கோபிக்கக் கண்ட பள்ளன் வெளிப்பட்டு வந்துசொல்லுகிறான்.

### கலித்துறை

நானுனைப் போற்றவும் நீயெனைக் காக்கவும் நாயடியேன்
தானுனைப் போலு மொருமுத லோநன்மை தந்துபுரப்
பானுநை வாயெனச் செய்வானும் நீயுன்கைப் பம்பரம்நான்
வேனுனைக் கண்ணுமை மைந்தா இந் தீவர வெற்பண்ணலே.

## பள்ளன் கூறுதல்

### சிந்து

பண்ணைக் காரன்முன் வந்த குடும்பன்
பணிந்திடாக் கள்ளப்பள் ளல்லவே நான்
கண்ணை மூடிக்கொண் டெண்ணுமல் இப்படிக்
காடு மேடும் பகரக் கணக்கோ
அண்ண லார்திரு மாமலை மேவுமுத்
தையர் பண்ணைக் கிருப்புஞ் செலவும்
திண்ண மாய்அடி யேன்சொல்லக் கேளும்
சினத்தை விட்டு விடும்பண்ணை யாண்டே. ௯௩

---

௯௨. முதலோ - முழுமுதற் பொருளோ. புரப்பானும், நைவாய் எனச் செய்வானும் நீ - என்னைக் காப்பதும் அழிப் பதும் உன் பாரம். வேல் நுனைக் கண் - வேல்போன்ற கூரிய கண். இந்தீவர வெற்பு - குவளை மலையாகிய திருமலை.

௯௩ - ௧௦௦. மாடு, நெல், ஏர்க்கால் வகைகளைக் கூறும் இப்பாடல்கள் முற்றிலும் சிலேடையாக இருபொருள் தந்து நிற்கும்.

௯௩. 'பயிரிடாக் கள்ளப்பள் ளல்லவே நான்' - மு. ௯௭. காடும் மேடும் - இல்லாததும் பொல்லாததும் என்பது போல.

## மாட்டு வகை

நந்தக் கோன்மகன் மைத்துன ஞனை
　　நரைக்கிழ வன்குற் ருலக்கோன் தந்த
தொந்திக் காளை குளங்குட்டம் நாடிச்செய்
　　தோப்புக் கடைகள் வாஞ்சித்து மேவும்
முந்தவே சந்து போனமால் காளை
　　முடப்படக் கூடக் காலொடு தூங்கும்
அந்தக் காரிக் கருங்காளை காணலாம்
　　அச்சங்க ரன்கோயிற் போனக்கால் ஆண்டே. ௯௪

---

௯௪ - ௧௦௦. மாடுகள் கெட்டுப்போய்விட்டன என்றும், விதைவகையைப் பிறர் கொண்டுபோய்விட்டார் அல்லது உண்டுவிட்டார் என்றும், ஏர்க்கால் வகை முறிந்தும் அறுந்தும் போய்விட்டன என்றும் சொல்லி, ஒரு பொருளும் உதவாது என்று பள்ளன் கூறுவது பள்ளுப் பாட்டின் மரபு.

௯௪. நந்தக்கோன் மகன் - ஓர் இடையன், நந்தகோபன் மகனான கண்ணன். மைத்துனன் - திருமால் மைத்துனனான சிவன். நரைக் கிழவன் - முதிய கிழவன், எருதையுடையவனான சிவபெருமான். குற்ருலக்கோன்-ஓர் இடையனென்றும் குற்ருலநாதனான சிவனென்றும் இருபொருள். தொந்திக்காளை - ஒரு காளை, விநாயகர். செய் - வயல். குளம் குட்டை தோப்பு வயற்கரைகளிலே விநாயகராலயம் இருக்கிறதென்ற குறிப்பு. வாஞ்சித்து - விரும்பி. முந்தவே - முன்னே பாரதப் போரில். சந்து - பூட்டுவிட்டுப் போனது, தூது போனது. மால் காளை - ஒரு காளை, கண்ணன். கூடக் காலொடு தூங்கும் - காளை கட்டப்பட்டது என்பது ஒரு பொருள்; கண்ணனாகிய குழந்தை உரலோடும் பிறவற்ருேடும் கட்டப்பட்டுக் கிடந்தான் என்பதும் மற்ருெரு பொருள். காரி - கரிய எருது, கரியவனான திருமால். சங்கரன் கோயிலில் சங்கரநாராயண மூர்த்தமானபடியால், இடபத்தையும் திருமாலையும் ஒருங்கே காணலாம்.

செய்ய செம்மறைக் காளையை வேலப்பன்
 செட்டி யார்அடித் தோட்டி யடைத்தார்
வைய முய்ந்திட மீண்டுந் தனக்கு
 மயிலை வேணுமென் றேபற்றிக் கொண்டார்
பொய்யிதோ மெய்யிற் சூடுண்ட காளை
 பொலியிற் போமதை இன்னமுங் காணேன்
அய்யர் தூக்குமுடக் கால்நக ரீசர்
 ஆங்கோர் காளையைக் கைக்கொண்டார் ஆண்டே.கூரு

நெல் வகை

ஆடற் சீரகச் சம்பாவை ஆரூரில்
 அல்லியங் கோதை பங்கெனக் கொண்டாள்
ஈடில் வாக்கருஞ் சூரைமுத் தையர்
 இரண்டு புள்ளுக்கும் பங்கிட்டுப் போட்டார்

---

கூரு. மறைக் காளை - மறையுடைய மயிலை நிறக்காளை, வேதத்தை அருளிய பிரமன். வேலப்பன் செட்டியார் - அப் பெயருள்ள செட்டியார், வேலனாகிய முருகன். 'கடற்சூர் தடிந் திட்ட செட்டி' - தேவாரம். அடைத்தார்-சிறையிட்டார். பிர ணவத்துக்குப் பொருள் கூறப் பிரமன் அறியாமையால் அவனை முருகன் சிறையிலிட்டான் என்ற வரலாறு. வையம்-உலகம். மயிலை-மயிலைக் காளையை, மயிலாகிய வாகனத்தை. சூடுண்ட காளை - சூடு போடப்பட்ட காளை, அரிந்து போட்ட நெற்கதி ரின் அரிக்கட்டை உண்ட காளை; மன்மதன். பொலி-பிணையல் மாடுகளோடு சேர்ந்து போகுங் காளை, அல்லது பசுக்களைச் சினைப்படுத்துவதற்காக வளர்க்கும் எருது; சாம்பலாய்ப் போனான் என்பதுமொன்று. தூக்கும் முடக்கால் நகரீசர் - நடராசர். காளை : இடபவாகனம்.

கூசு. அல்லியங்கோதை - பரவை நாச்சியார். சுந்தரர் குண்டையூரிலே பெற்ற நெல்லை ஆரூரில் பரவையகத்தே கொண்டு சேர்க்கப் பெற்றார். 'பரவை பசிவருத்த மதுநீயும்

சாடி யேவிளை குற்றாலன் தன்னைத்
 தரணி பீடத் தவக்கொடிக் கீந்தார்
தேடி யேவல்ல ரங்கனை ராமனுஞ்
 சிந்திப் போட்டனன் போர்க்களைத் தாண்டே.

நீண்ட பைங்குழ லாளை மதகெற்று
 நேற்றை வெள்ளத்திற் சாய்ந்தது கண்டீர்
பூண்ட வல்வித்தை யெல்லாஞ் சடானனப்
 புண்ணி யன்னடி யார்கள்கைக் கொண்டார்
வேண்டிடுஞ் சொல்லை யஞ்சுபங் கிட்டிந்த
 மேதி னிப்புல வோர்கள்கைக் கொண்டார்
தீண்டியே அந்தக் கோசலை ராகவன்
 சீதா போகங்கை யாடினன் ஆண்டே. ௬௭

அறிதியன்றே, குரவமரும் பொழில்சூழ் குண்டையூர்ச் சில நெல்லுப் பெற்றேன், அரவ மசைத்தவனே அவையட்டித் தரப்பணியே' என்பது அவர் தேவாரம். கருஞ்சூர் - கார் நெல், சூரபதுமனாகிய அசுரன். இரண்டு புள் - மயிலும் சேவலும். முத்தையர் - முருகன். குற்றாலன்-ஒரு நெல்வகை, குற்றாலநாதர். சக்தி பீடம் அறுபத்து நான்கினுள் திருக்குற்றாலமானது தரணி பீடம். தவக்கொடி - சத்தியாகிய குழல் வாய்மொழியம்மை. ரங்கன் - ரங்கஞ்சம்பா என்ற நெல்; படைக்கலம் வல்லவனான பரசுராமன். (அரங்கம் - படைக்கலம் பயிலுமிடம்.) போர்க்கு - நெற் போர்க்கு, சண்டைக்கு.

௬௭. பைங்குழலாளை-பசியதோகை போன்ற பயிர்; ஆளை- அறுகு; அதை யொத்த நெற்பயிர். மதகெற்று - மதகிலே மோதுகின்ற. (கங்கையின் வரலாறு ?) வித்தை-வித்தையை, நெல் விதையை. சடானனப் புண்ணியன் - ஆறுமுகனான முருகன். சொல் - நெல், மொழி. அஞ்சு பங்கு - எழுத்து. சொல், பொருள், யாப்பு, அணி என்ற ஐந்திலக்கணம். சீதாபோகம்- சீதாபோகம் என்ற நெல்வகை, சீதை என இருபொருள்: 'தாசரதி சீதாபோ கந்தனையே சிந்தித்தான்' - நெல்விடு தூது, ௧௬௭.

திருவ ரங்கனை முன்னம் வினதை
சிறுவன் தோட்சுமை யாய்க்கொண்டு போனான்.
மருவு சீர்மணல் வாரியைக் காவி
மலையனார் சத்திக் குண்ணக் கொடுத்தும்
அரிய நாய னெனக்கொண் டதிக்கி
ராதி யுங்கைக் கொண்டது முண்டே
கருதியே முத்து வெள்ளையை யாதவர்
கன்னி பாலனுக் கீந்தனர் ஆண்டே. கூஅ

ஏர்க்கால் வகை

எண்ணுந் தூணின் மருமா னுகந்தனை
ஈரி ரண்டுதுண் டாக முறித்தான்
கண்ணி லேகுழை யான்கலப் பையைக்
கருதி யேதலைக் கீழ்வைத்துக் கொண்டான்

---

கூஅ. அரங்கன் - திருமால், ரங்கஞ்சம்பா என்ற நெல். வினதை - கருடனுடைய தாய். சிறுவன் - கருடன். அரங்கனைக் கருடன் தோளிலே தூக்கிக்கொண்டு போய்விட்டான், சிறுவன் அந்நெல்லைக் கொண்டு போய்விட்டான் என இரு பொருள். மணல்வாரி - சமுத்திரம், ஒரு நெல் வகை. காவி மலையனார் - முருகன். சத்தி - வேல்; உண்ணக் கொடுத்த தாவது, சமுத்திரத்தை அழித்தது; 'வட்டவேலையும்...மடிய் வேல் விட்டோன்' என்பர் பின்னும் (கரு௰). அரிய நாயகன், அதிக்கிராதி என்பன நெல்வகைகள். அதிக்கிராதி என்பது அரிக்கிராவி. முத்து வெள்ளை - ஒரு நெல்வகை. முத்தின் வெண்ணிறத்தைப் பாலனை பலராமனுக்கு ஈந்தனர் என்றும் மற்றொரு பொருள் கொள்ளலாம்.

கூகூ. மருமான்-வழித்தோன்றியவன்; 'குடபுலங்காவலர் மருமான்'-சிறுபாணாற்றுப்படை. தூண் என்பவன் மருமகன் என்றும், தூணிலே தோன்றிய நரசிம்மமூர்த்தி என்றும் கொள்க. நுகந்தனை, உகந்தனை என்று இருவிதமாய்ப் பிரிக்க. நுகத்தை முறித்தான் என்றும், யுகங்களை நாலாகப்பிரித்தான்

மண்ணில் நீடு கொழுவைமுன் கைக்கொண்டு
வாரி வேலையில் வாணர்கள் விற்றூர்
அண்ண லேவள்ளைக் கையுமி ரண்டுதுண்
டான செய்தி அறிவீரே ஆண்டே. கூகூ

அழிவி லாத வடத்தைத மொழிச்சி
யலிய் தாக விசயனுக் கீந்தாள்
வழுவி லாவய மேழியை அம்பர
மன்னுந் தேர்க்குத் தரணிகைக் கொண்டான்
தெளிய நல்கு முளைகக்கோலை முன்னந்
தெரிந்து சன்னுசித் தேவர்கள் கொண்டார்
நழுவும் பேச்சை விடும்விடும் வேலுடை
நாயனு ருண்டு நம்பண்ணை யாண்டே. க00

---

என்றும பொருள். கண்ணிலே - கருதினுல். குழையான் - பலராமன். கலப்பை பலராமனுடைய ஆயுதம். கொழுவை - கொழு என்ற கலப்பையுறுப்பை, கொளுவை என்ற மீனை (சுகூ). மீனைக் கடற்கரையில் விற்ருர்கள் என்பதும் குறிப்பு. வள்ளைக்கை - கடைமுளை. இரணடு துண்டானது - இரண் டாய் முறிந்தது; கடைமுளை நுகத்தின் இருபுறத்துக்கும் இரண்டிருக்குமாதலினுலே.

க00. தத்தைமொழிச்சி - இனியமொழியாளான ஊர்வசி. விசயன் - அருச்சுனன். அலியதாக - ஊர்வசி அருச்சுனனைப் பேடியாகும்படி கொடுதத சாபம், நுகத்தை ஏர்க்காலோடு பிணைப்பதற்கான வடக்கயிற்றைமொழிச்சி யென்பவள் விசய னுக்குத் தினியாகக் கொடுத்தாள். விசயன் ஒரு நாயாயிருக்க லாம; அலி - சோறு; வடக்கயிறு தோலாலானபடியால். அயம் ஏழியை - சூரியன் தேரிற் கட்டிய ஏழு குதிரையை; வயமேழியை - அழகிய கலப்பையை. அம்பரம் - வானத்தில். தரணி - சூரியன், தரணி என்பவன். முளைக்கோலை சன்னுசி யும் தேவர்களும் கொண்டார் என்பது ஒன்று. மூங்கிற் குழாயிலே சன்னுசித் தேவர் என்பவர், கள்ளைக் கொண்டார் என்பது மற்றென்று.

### கலித்துறை

பெண்ணானை காந்தனைப் பேரானை தம்பியைப் பெய்முகிலூர்
விண்ணாணை யானைச் சடானன மூர்த்தியை வீணர்தம்பால்
நண்ணானைக் காவித் திருமலை யானைமுந் நான்குதிருக்
கண்ணானை என்னிரு கண்ணிற்கண் டேன்வினை கண்டிலனே.

## பண்ணைக்காரன் எண்ணுதல்

### சிந்து

கற்பனை யாயிந்த விண்ணாண வார்த்தை
எண்ணுமலே - பள்ளன்
கட்டுமட்டாய்ச் சொல்லத் தட்டைத்தலைப்பண்ணைக்
காரனார்
சற்பனை செய்யும் இவன்தப்பிப் போவது
போவனே - இந்தச்
சங்காத்தி என்கைத் தடியடிக் கேவசம்
ஆவனே. க0உ

---

க0க. பெண்ணானை - தெய்வயானையம்மை. காந்தனை - நாயகனான முருகனை. பேர்ஆனை - பெரிய யானையாகிய விநாயகர். பெய் முகில் ஊர் - மழை பெய்யும் மேகம ஊர்கின்ற. விண் ஆணையானை - விண்ணவர்கள்மீது ஆணை செலுத்தும் தேவசேனாபதியாகிய முருகனை. சடானனமூர்த்தி- ஆறுமுகன். நண்ணானை - பொருந்தாதவனை. கண்டேன், கண்டிலன் என்பது முரண்.

க0உ. விண்ணாண வார்த்தை - தந்திரமான அல்லது திறமையான பேச்சு. கட்டுமட்டாய் - திறமையாய். கற்பனை - வஞ்சனை ; 'சாமங்கள் தோறும் இவர்செயும் பூசைகள் கற்பனையே' - பட்டினத்தார். தப்பிப் போவனே - தண்டனை பெறாமல் தப்பிப்போக விடமாட்டேன் என்பது கருத்து.

அச்சமே கீழ்ச்சாதிக் காசாரம் என்பர்கள்
ஆருமே - நானும்
அவ்வார்த்தை தன்னைப் புதுப்பிக்கி றேனின்று
பாருமே
கச்சக்காய்ப் போசனம் கத்தூரி யானது
போலவே - இந்தக்
கள்ளனைச் சேரிக் குடும்பாக வைத்தனர்
ஏலவே. கOரு

பூனைபோய் இப்பாற் புலியாய்ச் செய்தான்பரி
காசமே - இப்
புலிவா லுருவிவிட் டாலோ வரும்வரும்
மோசமே
ஆனையைக் கொப்பத் தடைத்தாப் போலின்றைக்
கடைக்கிறேன் - பட்டால்
அன்றி யறியான் மரத்திட் டிவன்கால்
ஒடிக்கிறேன். கOசு

---

சங்காத்தி - பள்ளன். பள்ளன் தன் சாமர்த்தியத்தால் தப்பிப் போக முடியாது, தடியால அடிபடுவான் என்கிறான் பண்ணைக்காரன்.

கOரு. அச்சமே கீழ்ச்சாதிக்கு ஆசாரம் : ' அச்சமே கீழ் களதாசாரம், எச்சம் - அவாவுண்டேல் உண்டாம் சிறிது ' என்பது குறள், கOஎரு. கச்சல் - இளம்பிஞ்சு ; கச்சற் காய்ப்போசனம், அற்பப்பொருள் என்பது கருத்து. கத்தூரி - கத்தூரிச் சம்பா அரிசியாலாக்கின உயர்ந்த சோறு. குடும்பாக - பள்ளர் தலைவனுக. ஏல - பொருந்த.

கOசு. புலியை வாலுருவி விடுதல் என்பது பழமொழி ; இனி விடுமோ வயப்புலியை வாலுருவி விடுகின்றீரே ' - வில்லி பாரதம். கொப்பம் - யானை பிடிக்க வெட்டிவைத்த குழி ; ' கொப்பத்தில் ஆனை பட்டாப்போல் அகப்பட்டாய் ' - முக். கூஅ. மரத்திட்டு - தொழுமரத்திலிட்டு.

## பள்ளனைக் குட்டையிலடித்தல்

என்றிவை யெண்ணிய பண்ணையான் தச்சனைக்
கூப்பிட்டே - பள்ளன்
ஏங்கிடக் குட்டை யடித்தனன் சிக்கெனவொர்
ஆப்பிட்டே
அன்றந்தப் பள்ளனும் பண்ணைக்கா ரன்தன்னைச்
சீறியே - என்னை
ஆகா வழியாய் மரத்தடித் தீர்வம்பு
தூறியே. ௧0௫

## பள்ளன் கூறுதல்

பண்ணையிற் பள்ளி பணக்காரி தான்வண்டத்
தூவையே - நீரும்
பார்த்தாற் பசுப்போல் இருக்கிறீர் கைக்கூலிப்
பாவையே
பொன்பணங் கள்குடிப் பள்ளச்ச னங்கள்கை
யாடுமோ - கேட்ட
போதுமக் கேகடன் கொண்டுகப் பங்கட்டக்
கூடுமோ. ௧0௬

---

௧0௫. குட்டை - தொழுமரம். சிக்கென - உறுதியாக ; 'எய்ப்பிடத்துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்' - திருவாசகம். ஆப்பு இட்டு. தூறி - நிந்தித்து. என்னை ... அடித்திர என்பது பள்ளன் கூற்று.

௧0௬. வண்டத்தூவை - தீயவள் ; தூவை : தூர்வை ; செத்தை போல்வாள், கசடு. 'தூவையர்கள் சோகமுக நீலர்' - திருப்புகழ். 'பார்த்தாற் பசு பாய்ந்தாற் புலி' என்பது பழமொழி. பாவை - பொம்மை போல்பவன். குடி -

வறுத்தவ லொன்றைக் கொறிக்கிறீர் நீர்விசு
வாசியோ - சொல்ல
மாட்டா திருப்பதெல் லாம்பயப் பட்டுவாய்
கூசியோ
இறுத்திறுத் துப்பார்த்து வன்மிக்கி றீர்என்னைக்
கொல்லவோ - நரி
ஈடாடி முன்னம் எதிர்த்தா லதுசிங்கம்
அல்லவோ. கOஎ

## இளைய பள்ளி வருதல்

கும்பிட்டேன் குட்டை கழற்றி விடுமென்று
கெஞ்சியே - பள்ளன்
கூறிடக் கூறிடப் பண்ணையான் கோபங்கள்
மிஞ்சியே
வம்பிட்ட வார்த்தைகள் பேசி யவன்மனை
ஏகின்றான் - பள்ளன்
வாஞ்சிக்குஞ் சின்னக் குடும்பிச்சி யார்வந்து
நோகின்றாள். கOஅ

---

குடிகளான. கையாடுமோ - கையிலே வழங்குமோ. ஏழைக ளாகிய எங்கள் கையிலே பணமேது என்கிறான்.

கOஎ. இறுத்து - என்னைத் துன்புறுத்தி. வன்மிக்கிறீர்- திராப்பகை கொள்கின்றீர். ஈடாடி-சமமாக வந்து பொருது. முன்னம் - எதிரிலே.

கOஅ. வாஞ்சிக்கும் - காதலிக்கும். சின்னக் குடும்பிச்சி யார் - இளைய பள்ளி. நோகின்றாள் - வருந்துகிறாள்.

### கலித்துறை - வண்டுவிடு தூது

**கைக்கு** வளைக்குலங் காணுள் அரைக்குக் கலைமறந்தாள்
இக்கு வளைக்கு மொருவனுக் கேங்கினள் என்றருளச்
சிக்கு வளைக்குடம் பற்றியுண் டான்மெய்த் திருமருகன் [வண்டினமே.
மைக்கு வளைக்குன் றுடையான்முன் போய்ச்சொலும் வண்டி

## பள்ளனைக் கண்டு வருந்தல்

### சிந்து

கண்ணகைபோல் மண்ணுலகில்
பெண்ணுருவாய் வந்தபண்ணைப்
பள்ளி - சரடுசெய்த
கணவனுக்குச் சாடி சொல்லிக்
கண்ணிற் கண்டாள் இக்கோலங்
கள்ளி

---

கoகூ. இப்பாடல், வண்டுவிடு தூது என்ற அகத் துறையிலமைந்தது. முருகன்மீது தலைவி காதல் கொண்டமையாலே, வளைகள கழன்றோடி விட்டன, இடையிலே சேலையவிழ்ந்து போனதையும் மறந்துவிட்டாள். வளைக்குலம் - வளைகள். இக்கு வளைக்கும் ஒருவன - கரும்பு வில் வளைக்கிற மன்மதன். சிக்கு வளைக் குடம - மோர் தயிர் முதலியவற்றின் மணம் பொருந்திய வளைந்த வாயுடைய குடம். உண்டான் : திருமால். மைக்குவளைக் குன்று-கருங்குவளை மலை ; திருமலை. வண்டினமே, காணுள், மறந்தாள், ஏங்கினள் என்று, உண்டான் மருகன் உடையான் முன்போய் அருளச்சொலும் என்க.

ககo. கண்ணகை - கோவலன் மனைவியாகிய கண்ணகி. சரடு செய்த - தாலி கட்டிய. சாடி சொல்லி-கோள் சொல்லி. இக்கோலம் - இந்தத் துன்பம் நிறைந்த கோலம்.

தண்ணகையால் உயிர்வதைக்கும்
கொல்லிமலைப் பாவைகுணம்
படித்தாள் - சண்டாளி
தடங்தோளி லிருந்துசெவி
தனைக்கடித்தாள் நெஞ்சிற்கொண்டை
முடித்தாள். ககo

நேற்றிரவு கொடியகனாத்
தோற்றியது பலித்ததுபார்
குடும்பா - கறுப்பனுக்கு
நேர்ந்துவைத்த உருமாலை
நீயெடுத்தாய் இணக்கமில்லா
இடும்பா
நாற்றிசையில் தூற்றும்பெண்டிர்
கூற்றெனவே துரத்தாமற்
போனாய் - முழுதும்நம்பி
நச்சுமரந் தன்னைநட்டாய்
நாலுபேர் சிரிக்கஇடைப்
பட்டாய். ககக

ககo. தண் நகை - குளிர்நத புன்னகை. கொல்லி மலைப் பாவை : தேவருக்கும் அசுரருக்கும் போர் நடந்த காலத்தில், திருமகள் கொல்லிப் பாவை வடிவு கொண்டு, போர்க் கோலத்தோடு அசுரர் மோகித்து விழும்படி ஆடினளாம்; தேவர்கள் இப்பாவையின் வடிவத்தைக் கொல்லிமலையிலே நிருமிதது வைததார்களென்பதும் நோக்குவோரை இது தன் வசப்படுத்தும மோகினித்திறம் பெற்றதென்பதும் வழக்கு; இப்பாவை போல, இப்பள்ளி தனது நகையாலே உயிர் வதைக்கிறாளாம் குரங்கு தோளிலிருந்து செவியைக் கடித்தது என்பது வழக்கு; உறவாடிக் கெடுத்தல் என்பது இதன் கருத்து. பண்ணைப் பள்ளி : மூத்தபள்ளி.

ககக. கறுப்பனாகிய தெய்வத்துக்கு நேர்ந்து வைத்த உருமாலையை எடுத்து அணிந்துகொண்ட தெய்வக்குற்றத்தினால்

காரியக்கா ரன்திருட்டுக்
காரன்வம்புக் காரன்பண்ணைக்
காரன் - சுடுகெண்டைக்காய்க்
கரைக்குளத்தை வெட்டவல்லான்
கைக்கூலிக் கிணங்கும்வலுக்
காரன்
வீரியக்காள் மூத்தபள்ளி
செவிக்கடியால் இவ்வண்ணமே
கண்டான் - உன்னைக்கண்டே
வெயர்த்துடலும் பதைபதைக்க
விருதாவில் இப்பாவங்
கொண்டான். ககஉ

## பள்ளன் ஆறுதல் கூறுதல்

நாமிருவர் படுந்துயரை
ஆறுமுகத் தெய்வமறி
யாதோ - வீட்டினிற்போ
நன்னகரப் பள்ளிபகை
நாள்விரோதச் செயல்க
ளேதோ

---

அவனுக்குத் தண்டனை வந்ததென்று கூறுகிருள். 'தூற்றும் பெண்டிர் கூற்றெனத் தகும்' என்பது கொன்றைவேந்தன். நச்சு மரம் நட்டது, இளைய பள்ளியோடு கொண்ட உறவு.

ககஉ. கரைக்குளம்-கரையமைந்த குளம். கெண்டை மீன் வேண்டிக் குளத்தையே வெட்டி வடிய விடுபவன்; ஆலோசனையில்லாமல் காரியம் செய்பவன் என்பது கருத்து. வீரியக்காள் - பொல்லாதவள். செவிக்கடி: ககo. விருதாவில் - வீணாக. இப்பாவம் - உன்னைத் தண்டித்த இக்கொடுமை.

ஈமிதித்து முடமாமோ
இன்றுசிறை விடுவன்கட்டு
மட்டாய்க் - கறுப்பனுக்கும்
இடும்பனுக்கும் வேண்டிக்கொண்டே
இருபதுமுப் பதைநேர்ந்து
கட்டாய். ௧௧௩.

நீலிபண்ணைப் பள்ளியிங்கே
வருவள் அந்த நாய்வாயிற்
கோலை - நீஎதிர்த்து
நீட்டிவிடிற் பகைகாரி
கோட்டிகொண்டே புகல்வள் ஒருக்
காலே
சோலிபண்ண வேண்டாம்போபோ
குதிரைதனைக் கும்பிட்டேறிக்
கொண்டே - சவுக்கதனால்
துரத்தியடிப் பவர்களைப்போல்
அடிக்கிறேன் மகிழ்ந்திடுநீ
கண்டே. ௧௧௪.

---

௧௧௩. நன்னகரப்பள்ளி-இளையபள்ளி; விளி. 'ஈ மிதித்து முடமாமோ' என்பது பழமொழி; 'தாய்மிதித் தாகா முடம்' என்ற பழமொழி நானூறு காண்க. கட்டுமட்டாய் - சமர்த்தாய். கறுப்பனுக்கும் இடும்பனுக்கும் இருபது முப்பது காசை நீ சமர்த்தாய் நேர்ந்துகொண்டால், பண்ணைக்காரன் என்னைச் சிறை விடுவான் என்கிறான் பள்ளன்.

௧௧௪. நாய் வாயிற் கோலிட்டுக் குத்தினால் அது கடிக்க வருவதுபோல், நீ அவளைப் பழித்தால் அவள் இன்னும் பகைமைகொண்டு கோட்டிபுகல்வாள் என்று இளையவளுக்குச் சொல்கிறான். கோட்டி கொண்டு : பைத்தியக்காரத்தனமாக ஏதேனும உளறிவிடுவாள். மூத்தவளோடு தந்திரமாய்ப்பேசித் தன்னை விடுவித்துக்கொணடு பின் அவளைத் தண்டிக்கிறேன் என்கிறான்.

கோபங்கொண்டே பகையைவெல்லக்
கூடாது கால்நடுவே
குத்தித் - தைத்தமுள்ளைக்
கூரியமுள் கொண்டெடுப்பார்
அறியாரோ கேளாயென்
புத்தி
நீபந்தந்த தார்புனைந்த
திருமலையான் நாயன்நமக்
குண்டே - பலபடநீ
நினையாதே வீட்டினிற்போ
குற்றாலர் தமைநினைந்து
கொண்டே. ககரு

*கலித்துறை*

எழும்பால வித்தவ் வளவள வேனும் இரக்கமில்லேன்
தொழும்பாளுக்காகச் சுமைமாற்ற வந்து துணைசெய்வையோ
அழும்பாலன் ஆரெனக் கார்த்திகை மாதர் அறுவர்கொங்கைச்
செழும்பால் அருத்த அருந்துஞ்செங் காவிச் சிலைக்கந்தனே.

---

ககரு. 'முள்ளினால் முட்களையுமாறு' என்பது பழமொழி நானூறு. நீபம் - கடம்பமலர். நாயன் - நாயகன்; 'அடியனும் நாயனுமாய்'-மூக். கசுஎ. பலபட - பலவிதமாக.

ககசு. எழும்பு ஆல வித்து அவ்வளவு அளவேனும்: அற்பமும் அன்பில்லாதவனான யான் என்பது கருத்து. இல்லேனாகிய தொழும்பாள். தொழும்பாள் - அடியான்; 'தொழும்பாளர் எய்ப்பினில் வைப்பனே' - திருவாசகம். சுமைமாற்ற - பிறவியாகிய சுமையை மாற்ற. அருத்த - ஊட்ட. சிலை - மலை. அழும் பாலன் ஆர் என்று கேட்டு வந்து பாலருத்தியதாகச் சொல்வது, அன்பின் மிகுதியைக் காட்டுகிறது.

## மூத்த பள்ளி வருந்திக் கூறுதல்

### சிந்து

கசப்பு வாயில் இனித்திடு மோபண்டைக்
    கன்னியார் மூத்த பள்ளிநான் வந்தேன்
பசப்பி வண்டக் குடிலஞ்செய் நன்னகர்ப்
    பள்ளி மாப்பிள்ளை பண்ணைக் குடும்பா
வசப்ப டாவுன்னைக் குட்டை யடிக்க
    மனந்த ரித்தனள் நன்னகர்ப் பள்ளி
நிசப்படத் தெய்வத் தாணையுன் னுணைஎன்
    நெஞ்ச யர்ந்து துடிக்குது பள்ளா. கக௭

கள்ளி னுசையொன் றல்லாம லேபெண்கள்
    காத லாசையும் ஆருக்கும் ஆகா(து)
உள்ள மீதிரண் டாசையுங் கொண்டிந்த
    ஊருக் கும்நயி னருக்கும் ஆகாய்
பள்ளர் சேரச் சிரிக்க உடம்பு
    படைத்து நீபடும் பாடது தன்னை
விள்ள வாயற்றுப் பார்த்துப் பதைக்க
    விதித்த ஊழ்வினை வெல்லவொண் ணுதே. கக௮

---

கக௭. பள்ளனுடைய துன்பத்துக்குக் காரணமாயுள்ள வள் இளையவள் என்று சொல்லிக்கொண்டு, மூத்தவள் அவ னைப் பார்க்க வருகிறுள். குடிலம் - தந்திரம். மாப்பிள்ளை - இளையவளுக்கு மட்டும் காதலனுயுள்ளவனென்பது கருத்து. தரித்தனள் - பொறுத்தாள். நிசப்பட - உண்மையாக.

கக௮. பெண்கள்மேல் காதல் கொள்ளுவதாகிய ஆசை. நயினர் - பண்ணைக்காரர். நீ கள்ளாசையும் பெண்ணுசை யுங் கொண்டு ஆகாதவனுனுய். பள்ளர் சேர - பள்ளரனைவ ரும். விள்ள - சொல்ல.

தாவு மீனுக்கு வாலையும் பாம்புக்குத்
தலையுங் காட்டிய வஞ்சகக் கள்வா
நாவி லேலொன் று நெஞ்சினி லேலொன் று
நாளுங் காட்டிஎன் நட்பும் மறந்தாய்
ஏவும் வார்த்தைக் கிணங்காமல் நாயனுக்(கு)
ஏரும் பூசலு மாகத் திரிந்தாய்
தேவ நாயகன் காவித் திருமலைத்
தெய்வஞ் செய்த செயலிது பள்ளா. கககூ

## சோறு தருதல்

ஆறுமாத் தைக்கொரு நாளென் றாலுமுன்
அருமைக் குஞ்சையும் என்னையும் பாராய்
ஊறிநான் உள்ள சித்த முருகி
உனக்குச் சோறு பகையல வென்றே
சோறுநான் கொண்டுவந் தேனிதை யுண்ணச்
சொல்லக் கூசிப்பின் சொன்னேன் மனத்தில்
ஏறு மோமனங் கொள்ளாமற் சத்தி
எடுக்கினுஞ் சற்றுத் தின்னடா பள்ளா. க௨௦

---

கககூ. 'மீனுக்கு வாலும் பாம்புக்குத் தலையும் காட்டல்' என்பது பழமொழி; முக். அஎ. பூசல் - தெய்வத்துக்குப் பூசை போட்டுக் கள் குடித்தல். திரிந்தாய் - ஏய்த்தாய் என்பது கருத்து.

க௨௦. மாத்தைக்கு - மாதத்துக்கு. குஞ்சை - குழந்தையை. தன் வீட்டுக்குப் பள்ளன் வருவதில்லை யென்பதைக் குறிப்பிடுகிறாள். ஊறி - அன்பு ஊறி. பகையல - விருப்பமாயிருக்கும். மனங்கொள்ளாமல் - நடந்துபோனதை நினையாமல். சத்தி எடுக்கினும் - வாந்தி எடுத்தாலுங்கூட.

## பள்ளன் கூறுதல்

தின்னவே சொன்ன பண்பையிற் பள்ளி
 செருப்புக் காலிற் கடித்தது போல
நன்னகர்ப் பள்ளி சொல்லைஎண் ணுதந்த
 நாயை நீஎதி ராக்குவ தேதோ
முன்னமே கொண்டு தந்தாய் அவளை
 மூப்பி வாய்ப்பெனக் கொண்டு திரிந்தேன்
இன்னம் வேணுமென் முல்வேணும் உன்கருத்
 தெப்படி யப்படி என்க ருத்தே. கஉக

கெட்டதிற் போனது போகட்டும் நீஇனிக்
 கீறுங் கீற்ஞெரு நாளுங் கடவேன்
கற்றது நீசொல்லிப் பண்ணையிற் காரியம்
 காலஞ் செய்வது கோலஞ்செய் யாதே
மற்றதப் பண்ணையான் சண்ணைக் கடாவுக்கென்
 வார்த்தை ஏமுது நீசென்று பேசிப்
பற்றிய தொழுமரக் காவலை நீபிணைப்
 பட்டுக் கொண்டு விடுவிப்பாய் பள்ளி. கஉஉ

---

கஉக. பண்பையிற் பள்ளி : விளி. அந்த நாய் - மூத்தவளைச் சமாதானம் செய்யும்பொருட்டுப் பள்ளன் இளைய பள்ளியை இவ்வாறு சுட்டுகிறுன். மூப்பி வாய்ப்பு - தலைவியான உனக்கு வேண்டியவள் என்று. ' நீயாகிலும் சோறு கொண்டு வந்து தந்தாய் ; அவள் ஒன்றும் தரவில்லை ; அறியாமையால் அவளையே பெரிதாகக்கொண்டு இதுகாறும் திரிந்துவிட்டேன் ' என்று வருந்துகிறுன். நீ அவளை வேண்டுமென்ருல்தான் எனக்கு அவள் வேண்டியவளாவாள் என்கிறுன்.

கஉஉ. கீறுங் கீற்று : ' கிழித்த கோடு தாண்டமாட்டேன் ' என்பது வழக்கு. காலஞ் செய்வது கோலஞ் செய்யாது : முக். ருசு. சண்ணைக்கடா - தின்று கொழுத்த கடா ; முக். ருஙு ; பண்ணைக்காரனைச் சுட்டும் இகழ்ச்சிக் குறிப்பு.

இணங்க வேநங் கறுப்பன் தனக்கும்
இடும்ப னுக்கும்நன் றாய்நேர்ந்து கொண்டு
வணங்கிற் காரியம் கைப்பல னும்உன்
மனதின் வண்ணம் நடந்துகொள் வேன்நான்
பணங்கண் டாற்சொன்ன சொற்கட வான்அந்தப்
பண்ணை யானுக்குப் பத்தஞ்சு சொல்லிக்
குணங்கொண் டேஎன்னை ரட்சிகண் டாய்உன்னைக்
கும்பிட் டேன்காண் குடும்பிச்சி யாரே. கஉ௩

கலித்துறை

சைவ சிகாமணி கந்த சுவாமிபொற் றாள்எனக்குக்
கைவச மாகத் தருஞ்சே வகன்குந்தி காதலராம்
ஐவர் சகாயன் மருகன் திருமலை ஆறுமுகத்
தெய்வ சகாயமுண் டேவரு மோகொடுந் தீவினையே. கஉ௪

## மூத்த பள்ளி பண்ணைக்காரனை வேண்டல்

பல்லவி

கோபந் தணிந் திரங்குவீர் - நயினாரே
கோபந் தணிந் திரங்குவீர்.

அனுபல்லவி

கோபந் தணிந்திரங்கிக் குடும்பனை விடும்விடும்
கொத்தடி யானுடன் இத்தனை யேன் (கோபம்)

---

கஉ௩. பணத்தைக் கண்டால் பண்ணையான் விடுவித்து விடுவான். பத்தஞ்சு - பத்தஞ்சு பணம்; இவ்வளவுக்கு நீ பிணையிருந்து. குடும்பிச்சியாரே : மூத்தவளுடைய தயவு வேண்டியமையால் இவ்வளவு மரியாதை.

கஉ௪. பொற்றாள் - தன் திருவடியை. குந்தி காதலர் - பஞ்சபாண்டவர். சகாயன் - கண்ணன்.

கஉ௫. கொத்தடியான்-குலமுழுதும் அடிமையானவன்

சரணம்

௧. அடித்திடும் மரத்தொடுங் கிடக்கவோர் த்டுக்கோ
அடிக்கடி பனிக்குளிர் நடுக்கிடும் நடுக்கோ
பிடித்துண்ணக் கொடுப்பவர் ஒருத்தரு மிலேயே
பிழைப்பதெப் படிப்பள்ளன் வருத்தமோர் மலேயே.

௨. உழைத்திடும் அடிமையைக் கெடுத்திடும் சிறையே
உரத்தடித் தடித்தர வணைப்பது முறையே
மழைக்குப சரித்தெவர் பெயச்சொல்லு வாரே
மரத்தடித் திடுஞ்சிறை விடச்சொல்லுவீரே. (கோ)

௩. எடுத்திடும் பிறவியின் குருட்டுடன் நீரே
இளநீரின் குழம்பிட வோநயி னூரே
குடித்திடும் வெறிப்பள்ளன் குணங்குண மாமோ
குணத்தினுக் கவிழ்சதங் கொடுத்திட லாமோ. ()

௪. வாளெடுத் தோங்கிப்பின் புறங்கொண்டு வீசி
மருட்டுவ தல்லது வர்மங்கள் பேசி
நாளினைச் செலவிடில் குறைநமக் கலவோ
நமக்குப சாரங்கள் நானின்று சொலவோ. (கோ)

---

(௧) தொழு மரத்தோடு கிடக்கவென்றால், மரம் ஒரு தடுக்காகுமா. பள்ளன் துயரம் மலேபோல் பெரிது.

(௨) குட்டையிலடித்தமையால் அவன் பின்னால் பயிர்த் தொழில் செய்வதற்குக் கேடு வரும். உரத்து - மார்பிலே (அல்லது ஓங்கி). அரவணைப்பது-ஆதரிப்பது. மழை தானே பெய்து உபகாரம் செய்வதுபோல, நீரே அவனை விடுவிக்க வேண்டும்.

(௩) குழம்பிடவோ : பழமொழி ? குடிகாரன் குணம் குணமாகுமா. மருந்து கொடுத்துக் குணத்தை மாற்றமுடியுமா.

(௪) வாள் எடுத்து ஓங்கி மருட்டுவது : 'கடிதோச்சி மெல்ல எறிக' - குறள் ருசுஉ. புறங்கொண்டு - பின் புறத்தினாலே. மருட்டுவது - பயமுறுத்துவது. குறை நமக்கு : பயிர்த் தொழிலுக்குக் காலதாமதமாகுமாதலினாலே. நமக்கு - தங்களுக்கு.

ரு. உமக்கடி யான்சற்றுஞ் சலுகையைக் கண்டோ
ஒளித்தோடிப் போங்கள வெங்களுக் குண்டோ
சுமக்கிற எருதுக்குத் துள்ளவுங் கடனே
சுடச்சொல்லு வீர்காரியங் கெடுப்பதுந் திடனே.()

சு. வம்பிநன் னகர்ப்பள்ளி பேச்சையுங் கேளான்
வயலுழும் வேலைக்கு மலைத்திடுந் தோளான்
நம்பிய குடும்பன்செய் பிழைபொறுப் பீரே
நான்பிணை நான்பிணை நான்நயி னாரே. (கோபம்)

## பள்ளனை விடுவித்தல்

### கலித்துறை

மறையிட்ட வேதனை நக்கீர னைத்திரு
மாமலையான்
சிறையிட்டு விட்ட செயலல்ல வோசெப்ப
வேபண்ணையான்
முறையிட்ட மூத்தவள் முன்னிலை யாய்க்குட்டை
முன்னடித்துக்
குறையிட்ட வன்சிறை விட்டான்நம் பண்ணைக்
குடும்பனையே. கஉசு

---

(ரு) சற்று உம் சலுகையை. சுமக்கிற எருது: 'துள்ளுகிற மாடு பொதி சுமக்கும்' என்பது பழமொழி. திடன் - நிச்சயம். உம்முடைய கோப வார்த்தையினால் காரியம் கெட்டுவிடும்.

(சு) கேளான் - இனிமேல் கேட்கமாட்டான். மலைத்திடும் - அஞ்சும்.

கஉசு. மறையிட்ட வேதன் - வேதத்தை அருளிய பிரமன். பிரமனைச் சிறையிட்டு, நக்கீரனைச் சிறைவிட்ட செயல். திருப்பரங்கிரியிலுள்ளதோர் தடாகக் கரையில் சிவபூசையில் வழுவிய நக்கீரரை ஒரு பூதம் உண்ண எண்ணிச் சிறையிட்டு வைத்திருக்க, அவர் பாடிய திருமுருகாற்றுப்படைக்கு

## பள்ளன் கூறுதல்

### சிந்து

தெய்வ நாயகன் திருமலை யாண்டவன்
செழும்பண்ணை நயினாரே
தேவ ரீர்மனக் கோபத்தோ டென்பயந்
தீர்ந்தது நயினாரே
கைவ சப்படச் செய்யுழ வேன்ஒரு
காரியம் நயினாரே
கள்ளி மூத்தபள்ளி பிணைதனைக் கும்பிட்டேன்
கழித்திடும் நயினாரே. கஉஎ

இருப்பு விலங்கிட்ட யானையைப் போர்க்களத்
தேவுவர் நயினாரே
எனை மரத் தடித்தீர் விடுத்திடிற் குறையாய்
எவர்சொல்வர் நயினாரே
விருப்புறும் இளையவள் சமர்த்திகைத் திறஞ்சொல்ல
வேணுமோ நயினாரே
வீட்டிலி ருந்துபழி மூட்டிடும் மூத்தவள்
வீவிகாண் நயினாரே. கஉஅ

---

மகிழ்ந்து, முருகன் அப்பூதத்தைக் கொன்று, நக்கீரரைச் சிறையிலிருந்து வெளிவிட்டான் என்பது வரலாறு. இச் செயல்போலிருந்தது, மூத்தவள் பிணையின்மேல் பண்ணைக் காரன் பள்ளனை விடுதலை செய்த செயல்.

கஉஎ. செய் - வயல். கும்பிட்டேன், பிணைதனைக் கழித் திடும் : மூத்தபள்ளியின் பிணையிலிருந்து என்னை விடுவியும் என்று பள்ளன் வேண்டுகிறான்.

கஉஅ. நீரே என்னை மரத்தடித்து, விடுத்தால் அதில் என்ன குறை ? பிணை எதற்கு என்கிறான். ககச-ல் பள்ளன் இளையவளிடம் கூறியதைக் காண்க. வீவி - கர்வமுடையவள்.

சாதி முறைமைகள்ளுக் குடித்துரைப் போம்அதைச்
சகித்திடும் நயினாரே
தாமுண் ணுஞ் சோற்றில்நஞ் சதுகலப் பவர்ஒருத்
தருமில்லை நயினாரே
நீதி யுறநமது பண்ணையி லேர்வகை
நெல்வகை நயினாரே
நின்றசீ ரின்வகை யாவையும் பகர்வேன்
நெறியுடன் நயினாரே. கஉகூ

கலித்துறை

காவித் திருமலைச் சண்முக நாயகன் கால்பிடித்துப்
பாவித் திருமலை யாமல்நெஞ் சேவினை பற்றியநம்
ஆவித் திருமலை யானிலம் போலசைந் தஞ்சயமன் [னே.
கோவித் திருமலை ஐயையுண் டாக்கிக்கைக் கொள்ளுமுன்

மாட்டு வகை

சிந்து

கூழைவாலன் கூடுகொம்பன் குத்துக்குளம்பன்
மயிலை கரும்போரான் சுட்டிவெள்ளை
கொட்டைப்பாக்கன் செம்மறையன் வெண்தலையன்
குற்றாலன் வெள்ளிக் கண்ணன்மாலான்

---

கஉகூ. நின்ற சீரின் வகை - மிகுதியுள்ள மாட்டுவகை முதலியன.

கஙo. பாவித்திரு மலையாமல் - மயக்கமின்றி அவன் திருவடியே சிந்தித்திரு. நம் ஆவி - நம் உயிரானது. மலய அனிலம், மலையானிலம்; பொதியிற் றோன்றிய தென்றல். மலையானிலம்போல் அசைந்து அஞ்ச - காற்றைப்போல் நடுங்கி அஞ்சும்படியாக. கோவித்து-கோபித்து. ஆவி அஞ்ச, யமன், இருமலை ஐயை உண்டாக்கி (ஆவியைக்) கைக்கொள்ளு முன்னே, கால் பிடித்து மலையாமல் பாவித்திரு என்க. ஐ - கோழை.

கஙக. கூழைவாலன் முதலியன மாட்டின் பெயர்கள். கூடுகொம்பன் - நுனிகூடிய கொம்புடையது. செம்மறையன் -

மேழைக்காளை கருமறையன் சூடுதின்னி [பன்
வெள்ளைக்காலன் மட்டைக்கொம்பன் திருகுகொம்
வெடிவாலன் வெறியன்ஆனைச் சொறியன் இவை
விரும்பிஏர் கட்டினேன் ஆண்டே. கநக

வித்து வகை

புழுகுச்சம்பா மணல்வாரி சொரிகுரும்பை
புத்தன்வாரி சிறைமீட்டான் கருஞ்சூரை
பூம்பாளை குற்றாலன் பாற்கடுக்கன் - கற்
பூரப்பாளை காடைக்கழுத்தன் மலைமுண்டன்
மிளகுச்சம்பா திருவரங்கன் குறுவைக்கிள்ளை
முத்துவெள்ளை அதிக்கிராதி பனைமுகத்தன்
வித்தின்வகை இத்தனையுஞ் சித்திரமாய்க்
கட்டினேன் ஆண்டே. கநஉ

ஏர் வகை

கலப்பை நுகமும்பூட்டுங் கயிறும்வள்ளைக்
கையும் உழக்கோலுங் கொழுவுடனே
கயமரமும் மண்வெட்டியும் வடமும்
இனிதாய் இயற்றி வைத்தேன்

---

சிவந்த மறையுடையது. கரும்போரான் - கரிய குதிரை போன்ற தோற்றமுடையது.

கநஉ. புழுகுச்சம்பா முதல் பனைமுகத்தன் வரை நெற் பெயர்கள். மணல்வாரி குற்றாலன் அரங்கன் கருஞ்சூரை முதலியவற்றை கூகூ - அ பாடல்களிலே காண்க.

கநந. கலப்பை முதல் வடம் வரை கருவி வகைகள். வள்ளைக்கை - கடைமுளை. கயமரம் - கசமரம்; பரம்புச் சட்டம். வடம்-வடக்கயிறு.

நலத்தகும் திருமலையான் பண்ணைப்பண்ணை
வயலி லின்றே சிறப்பாக
நாமெல்லோருங் கூடிச் சென்றே
நாளேரிட வாரும் நயினாரே. கநங

## நாள் பார்த்தல்

### கலிப்பா

மாட்டின்வகை நெல்லின்வகை மற்றுமுள்ள சீரின்வகை
காட்டியித மானபண்ணைக் காரனுக்குச் சொன்னபள்ளன்
ஆட்டிலுர மேற்றும்வயல் அன்பாய்நா ளேரிடும்நாள்
கேட்டியல்பாய்ச் சொல்லுமென்றங் கீகரித்து நின்றானே. கநச

### சிந்து

திங்கள் வார மின்றுமூல நட்சத்ரம்
செய்ய பஞ்சமிப் பக்கஞ்
சிங்கக் கரணஞ்சுப யோகமின் றைக்கென்னச்
செப்பி னார்கள் குடும்பா
அங்கண் மாநிலம் பரவுந் திருமலைமுத்
தையன் பண்ணைப் புரவில்
வெங்கண் ஆளையேவி நாளே ரிடவா - நல்ல
வேளை யீது குடும்பா. கநரு

கநங. நாளேரிட - பொன்னேரிட; நல்ல நாளிலே முதன்முதல் ஏர் பூட்டி உழத் தொடங்குதலுக்கு நாளேரிடுதல் என்று பெயர்.

கநச. ஆட்டிலுரமேற்றும் - ஆட்டெரு வைத்து உரஞ் செய்த.

கநரு. பண்ணைக்காரன் கூற்று. அங்கண் மாநிலம் - இடமகன்ற உலகம். புரவு - வயல். வெங்கண் - கொடிய கண்ணையுடைய.

## நற்சகுனமாதல்

### சிந்து

ஆக்கமாய்க் குடும்பன் விதையுங் கொண்டுவயல்
அணுகச் செல்லும் போதில்
ஆவின் பாற்குடமும் நிறைநீர்க் குடமுங்கொண்(டு)
அரிவையர் எதிர் தோன்றக்
காக்கை நாரை வலஞ்செய்யவே உபய
கருடன் வட்ட மிடவே
கண்ட குடும்பன் நாளேரிட்டு நாள்வித்துங்
களிப்புடன் பிடித்து வந்தான். கரு௬

மீளும் போதினிற் காக்கை இடம்புகுத
வேத னொருவன் வரவே
வீரன் திருமலையில் வேலன் கருணையிது
வேறிலை யெனமகிழ்ந்தே
ஆளும் பண்ணையீர் சுபசோப னமுங்கொண்
டடிமை இங்கு வந்தேன்
ஆருங் காணவயல் நாற்றுப் பாவுதற்கு
வாரும் என் நயினாரே. கரு௭

---

கரு௬. 'நீர்க்குடம், பாற்கலசம்...நாடி எதிர்வர நன்மையாம்.' காகமும் நாரையும் இடமிருந்து வலம் போதலும், கருடன் வட்டமிடுதலும் நற்சகுனங்கள்.

கரு௭. வேதன் - பிராமணன். நாற்றுப் பாவுதற்கு - நாற்றுக்காக விதையை நெருக்கித் தெளிப்பதற்கு. பள்ளன் மகிழ்ந்து, பண்ணையீர் வாரும் என்று பண்ணைக்காரனை அழைக்கிறான்.

## பள்ளர் நாற்றுப் பாவச் செல்லுதல்

### கலிப்பா

**பூ**வுலகில் மிக்காய்ப் புகழ்பண்ணைப் பள்ளர்சந்தக்
காவுசெறிந் தோங்குநறுங் காவித் திருமலையான்
மேவும்அடி யார்உளத்தில் மேலாம் பரவருளைப்
பாவுதலொப் பாய்நாற்றுப் பாவவயல் புக்கனரே. கரு அ

### சிந்து

பெருந்தொழிற் குடும்பன் - உழுதிடுங்
கருந்தொளி கலக்கி - விதையிட்ட
பெட்டியைச் சிரத்தே - வைத்ததைத்
தொட்டுட னெடுத்தே
திருந்தயில் வாழி - எனச்சொல்லிப்
பொருந்தும்நெல் விதைத்தான் - விதைத்தது
செய்த்தலை நிரம்ப - நிரந்தது
சித்திர முறவே. கரு கூ

---

கரு அ. மிக்காய் - மிகுதியாக. சந்தக் காவு - மணம் நிறைந்த சோலை. பரஅருள் - தெய்வஅருள். அடியார் உள்ளத்தில் முருகன் தன் அருளைப் பாவுதல் ஒப்பாக வயலில் பள்ளர் நாற்றைப் பாவுகிறார்கள்.

கரு கூ. கருந்தொளி - கருநிறமான வயற்சேறு. திருந்து அயில் வாழி - முருகனுடைய வேல் வாழ்க; முருகனை வணங்கி என்பது கருத்து. அயில் - வேல். செய்த்தலை - வயலிடங்கள். நிரந்தது - பரவிச் செழித்தது. சித்திரமுற - அழகாக.

## நாற்று வளர்தல்

திருமலைப் பெருமான் - நமக்காய்
இருநிலக் குருவாய் - வந்துப
தேசத்தை யளித்தே - அடும்பல
பாசத்தை ஒழித்தே
அருளது விளைக்கும் - போதினிற்
சிவமுளை முளைக்கும் - வகையென்ன
அங்குரித் தெழுந்தே - குருத்ததங்
கணிவயல் நாற்றே. கசO

முதலது ஒன்றாய்த் - திருமலை
முத்தையன் பலவாய் - விரிந்திடும்
முறைமைய தெனவே - ஈரிலை
மூவிலை கொண்டே
பதரற விளையும் - பயிரது
முளையினில் தெரியும் - எனக்கண்டு
பள்ளனும் மகிழ - வளர்ந்தது
பாவிய நாற்றே. கசக.

---

கசO. அங்குரித்து - முளைத்து. குருத்தது - வளர்ந்தது. இச்செய்யுளிலே கூறிய சைவசமயக் கருத்தை, 'துன்னிய ஐம் புலவேடர் சுழலிற்பட்டுத் - துணைவனையும் அறியாது துயரு றும் தொல் உயிரை, மன்னும்அருட் குருவாகி வந்தவரின் நீக்கி - மலம்அகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்', 'ஆரியனும் ஆசான்வந் தருளால் தோன்ற-அடிஞானம் ஆன் மாவில் தோன்றும் தோன்றத், தாரியனும் சிவன் தோன்றும்' என்ற சிவஞானசித்தியார் திருவிருத்தங்களிற் காண்க.

கசக. முதல் - நட்ட நாற்றுமுதல். பலவாய் - பல கிளை களாய்க் கிளைத்து. முத்தையன்...விளைந்திடும் முறைமை: 'ஒன்றாய் முளைத்தெழுந் தெத்தனையோ கவடுவிட்டு' - திரு வாசகம். 'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்பது பழமொழி.

## நாற்றுப் பறித்தல்

### கலிப்பா

நாற்று வளர்ந்தே நடப்பருவம் வாருமெனத்
தோற்றும் படிகுடும்பன் சொன்ன மொழிக்கிசைந்தே
ஆற்றலுறும் பண்ணையான் அன்பாக நல்லடியார்
போற்றுகுகன் பண்ணைப் புரவில்ஆள் ஏவினனே. கசஉ

### சிந்து

குறித்த அக்ரம சூர னுடலை
அறுத்த விக்ரம வேலி னுன்
குவளை வாவித் திருமலைக் குகன்
வளமைப் பண்ணைப் புரவிலே
மறித்த ஆடும் பசுவும் நிரக்க
நிறுத்துத் தரிசை யடித்தபின்
மறுத்து மறுத்து முச்சா லடித்து
மடித்து உழும்நான் குழவிலே
செறுத்த புனலை யுடைத்துக் குழப்பித்
திருந்த வலவ னடியையுந்
திருத்திப் பரம்பும் அடித்துக் குழைகள்
பதித்துச் சமைந்த தொளியிலே

---

கசஉ. குகன் - முருகன். புரவு - வயல்.

கசந. சூரன் - சூரபதுமன். விக்கிரம வேல் - பராக்கிரமம் பொருந்திய வேல். ஆடும் பசுவும் : ஆட்டுக்கிடையும் மாட்டுக்கிடையும் வைத்து எருவிட்டு. நிரக்க - போதிய அளவுக்கு. மறுத்து மறுத்து - மீண்டும் மீண்டும். முச்சாலடித்து - மூன்று சால் உழுது. செறுத்த புனல் - தேங்கிய

பறித்த நாற்றை நாலு திசையுங்
குறித்து நோக்கிக் கும்பிட்டே
பழக்க மாய்நட வாரும் குரவை
முழக்க முழக்கும் பள்ளீரே. கசரு

## பள்ளியர் வகை

செந்தில் ஏரகந் திருப்ப ரங்கிரி
எந்தை காவித் திருமலைத்
தெய்வ நாயகன் பண்ணைப் பண்ணைச்
செய்யில் நாற்றை நடுதற்கே
மந்தி முகத்து மாடியும் - அவள்
மருமகள் நெட்டைச் சூடியும்
மாலையும் மொண்டிச் சோலையுங் - குறு
வாச்சியும் சின்னப் பேச்சியும்
சந்தியும் பொத்தைக் குந்தியும் மொட்டைச்
சடைச்சியும் பிச்சி உடைச்சியும்
சல்லிப் பொயிலி வெயிலியுங் கட்டைச்
சாத்தி மூளிக் காத்தியும்

---

நீர். வலவனடி - வலப்புறமுள்ள வயல். குழைகள் பதித்து - பசுந்தழை எருவையும் இட்டு. தொளி - சேறு. நாலு திசையும் நோக்கிக் கும்பிடுதல் வழக்கு ; முக். கஉரு. குரவை - நடுவோர் பாடும் பாட்டு. பள்ளீரே : விளி ; ஒருத்தி மன்றெல்லோரையும் அழைக்கிருள்.

கசச. செந்தில் - திருச்செந்தூர். ஏரகம் - சுவாமிமலை. செய் - வயல். மந்திமுகம் - குரங்கு போன்ற முகம். மாடி முதல் தெற்றுப்பல்லி வரை நடவந்த பள்ளியர் பெயர்கள். சூடி : கசகூ. சடைச்சி : கசஎ. உடைச்சி : கசஎ, கருரு.

நந்தியும் முடச் சுந்தியுங் - கரு
நாக்கியுந் தொந்தி மூக்கியும்
நல்லியுந் தெற்றுப் பல்லியுங் கூட
நடுக வாரும் பள்ளீரே. கசச

## அறுசீர் விருத்தம்

குடப்பால் முலைகள் குலுகுலுங்கக்
குழவி யிடுக்கிப் போவாராம்
படப்பால் தோற்பைத் தனம்புரளப்
பற்போம் வாய்மென் றுடன்செலுவார்
இடப்பாற் கரத்தை இடுப்பினில்வைத்(து)
எடுப்பாய்ப் பேசி இறுமாந்து
நடப்பார் சரசஞ் சொலிச்சிரிப்பார்
நாற்று நடப்போம் பள்ளியரே. கசரு

---

கசச. நடுக - நடுவதற்கு.

கசரு. இடுக்கி - இடுப்பிலே ஒடுக்கி எடுத்துக்கொண்டு. படப்பால் - பால்பட ; பால் இல்லாது போக. தோற்பைத் தனம் : இப்பள்ளியர் கிழவிகள் என்பது கருத்து. பற் போம் வாய்-பல்போன வெறும் வாயை மென்று அதுக்கிக்கொண்டு. இடப்பாற் கரத்தை - இடது கையை. எடுப்பாய் - கர்வத் தோடு. நடப்பார் - செல்கிறார்கள். சரசம் - பரிகாசம். குழந்தை ஏந்திச் செல்லும் பள்ளியரும், கிழவிகளும், இளம் பள்ளியரும் முறையே செல்கிறார்கள்.

## நடுகை

### சிந்து

ஆடு மயிலும் நீடு மயிலும்
அமுத மயிலும் புலவர்கோன்
ஆனை மயிலுங் கான மயிலும்
ஆறு முகமு முடையவேள்
பாடுந் தலைமைப் புலமை நிலைமை
படைத்த மலயத் தகத்தியன்
பரவுங் காவித் திருமலைக் குகன்
பண்ணைப் புரவில் நடச்செய்தே
ஓடுங் கெண்டையைக் கூடன் கொழுந்தி
சூடி குனிந்து பிடிக்கிறாள்
உதட்டுச் சங்கிலி கொழுப்பைப் பார்அவள்
கவட்டுக் கீழ்நுழைந் துழக்கியே
மூடுந் தொடையின் அடியைத் தடவி
முட்டுங் கெண்டையைப் பிடியென்றே
முடுக்கு றான்அவள் துடிக்கி றாள்பயல்
முரண்டைப் பாரடி பள்ளீரே. கசசு

---

கசசு - கசசு. இப்பாடல்களின் முதற்பாதியில் முருகன் பெருமையையும், பிற்பாதியில் பள்ளர் காதற் சேட்டைகளையும் பள்ளியர் கூற்றாகக் கவிஞர் காட்டுகிறார்.

கசசு. ஆடும் மயில் : மயில் வாகனம். நீடும் அயிலும்- நீண்ட வேலாயுதமும் உடைய. அமுதம் அயிலும் - அமுதமுண்ட, புலவர்கோன் - தேவர் கோனான இந்திரன். ஆனை மயில் - அவ்விந்திரன் மகளான தெய்வயானையம்மை. கான மயில் - வள்ளியம்மை. வேள் - முருகவேள். மலயத்து அகத்தியன் - பொதிகையிலுள்ள அகத்திய முனிவர். பரவும் - வழிபடும். நடச் செய்தே - நடச்சே ; நடும்போதே என்பது பொருள். கெண்டை - கெண்டைமீன். கொழுப்பைப் பார்

ஏர கந்திரு ஆவி னன்குடி
இலஞ்சிப் பள்ளி திருச்செந்தூர்
இடைக ழித்திருத் தணிப ரங்கிரி
இலகு சோலை மலையில்வாழ்
வீர கஞ்சுகன் கோர வஞ்சகச்
சூர்த டிந்துவிண் காத்தருள்
வேல வன்திரு மலைக்கு கன்பண்ணை
விளங்கும் புரவில் நடச்செய்தே
ஊர கந்தனில் இருக்கும் குடும்பர்
ஆருக்கும் இது பிடிக்குமோ
உடைச்சி கொழுந்தி சடைச்சி முலையில்
தெறித்த சேற்றைச் சுரண்டியே
தூர கந்தனில் பழுத்த பலவின்
சுளையைத் தின்னெனக் கொடுக்கிறான்
துடிக்கி றாள்அவள் உடுத்த சேலையை
அவிழ்க்கிறான் பாரும் பள்ளீரே. கசஎ

---

என்று அருகில் நின்ற மற்றொரு பள்ளி கூறுகிறாள். முரண்டு - விஷமச் செயல். கூடன், சங்கிலி : பள்ளர். சூடி - பள்ளி.

கசஎ. ஆவினன்குடி - பழனி. இலஞ்சி - திருமலையின் அருகிலுள்ள திருஇலஞ்சி; அங்குள்ள குமாரர் கோயில் என்ற முருகன் ஆலயம் புகழ் பெற்றது. இடைகழி - சோழநாட்டிலுள்ள திருவிடைக்கழி. திருத்தணி - தணிகை. சோலைமலை - திருமாலிருஞ் சோலை மலை ; இப்போது கள்ளழகர் கோயில் என்று வழங்கும் திருமால் தலம். இது முற்காலத்திலே முருகன் படைவீடா யிருந்ததென்பது பலர் கருத்து. கஞ்சுகன் - சட்டையணிந்தவன். கோர வஞ்சகச் சூர் : கொடிய சூரபதுமன். தடிந்து - கொன்று. விண் - தேவலோகம். ஊரகம்-ஊரினுள். இது - பின்னாலே சொல்லப்போவது. தூரகம்-வேரின் கண்ணே. பலவின் - பலாப்பழத்தின். 'வேரிலே பழம் பழுத்துத் தூரிலே சுளை வெடித்து' - குற்றாலக் குறவஞ்சி.

அஞ்சு தலைகொண் டசுரர் மடிய
ஆறு தலைகொண் டேழுபார்
அளிக்கும் வேற்கை கொண்டெனை முற்றும்
அடிமை கொண்டருள் குமரவேள்
மஞ்சு தலைகொண் டேறும் இந்திரன்
மிஞ்சு தலைக்கொண் டமரரூர்
வாழ வைத்தருள் திருமலைக்குகன்
வழங்கும் புரவில் நடச்செய்தே
பஞ்சு வெட்டி தன் மகளைக் கறுத்த
குஞ்சு மாடன் கெஞ்சியே
பாக்கு வெற்றிலை தாவென் றான் அவள்
மூக்கைச் சுழித்து வாவென்றாள்
கொஞ்சி யடுத்து மடிக்குள் ஒருகை
மிஞ்ச விடுத்துத் தடவுறான்
குலுங்கக் குலுங்கச் சிரிக்குஞ் சிறுக்கி
குடிலம் பாரும் பள்ளீரே. ௧௪௮

வெம்பும் அமரர் துயரக் கடலுக்(கு)
அம்பி யானசண் முகக்குகன்
விருது கோழியங் கொடியினான் வள
மருவும் ஆவினன் குடியினான்

௧௪௮. அஞ்சுதலை - அச்சத்தை. ஆறுதலை - தேறுதலை. ஏழு பார் - ஏழுலகும். அஞ்சு, ஆறு, ஏழு என்பது எண்ணலங்காரம். அளிக்கும் - பாதுகாக்கும். வேற்கை - வேலேந்திய கை. மஞ்சு தலைகொண்டு - மேகத்தின்மீது; மேகம் இந்திரனுக்கு ஊர்தி. மிஞ்சுதல்-அசுரரை வெல்லும் தன்மை. அமரரூர் - தேவலோகம். பஞ்சு வெட்டி-ஒரு பள்ளன் பெயர். குஞ்சு மாடன் - மற்றொரு பள்ளன். குடிலம் - திருட்டுத்தனம்.

௧௪௯. வெம்பும் அமரர் - துன்புற்ற தேவர். அம்பியான - கடல் கடப்பதற்கேற்ற ஓடம்போன்ற. சேவற் கொடியை

நம்பி ரார்க்குப தேசஞ் செய்குக
நாதன் வேதத் திருமலை
நாயகன் பண்ணைப் புரவில் பழைய
நாற்றங் காலில் நடச்செய்தே
செம்பி திருட்டு மொழியிலே - அந்த
வம்பி மருட்டும் விழியிலே
திரண்டெ ழுந்தனக் குடத்திலே - அதிற்
புரண்ட சைந்தகல் வடத்திலே
கம்பி கட்டிய உடையிலே - இடைப்
பம்பும் நட்டணை நடையிலே
கையிலே கையிற் காப்பிலே மூத்தன்
கலங்குறுன் பாரும் பள்ளீரே. கச௯

வட்ட வேலையும் கிரவுஞ்ச மென்னும்
மலையும் மடிய வேல்விட்டோன்
வண்ண வாவித் திரும லைக்குகன்
பண்ணைப் புரவில் நடச்செய்தே
மொட்டை இருளன் மட்டி வாய்ப்பயல்
நெட்டை யழகி முலையினை
முட்டிக் குடிக்கும் எருமைக் கன்றெனை
எட்டிப் பிடித்துச் சவைக்கிறுன்

---

யுடையவன். ஆவினன்குடி - பழனி. நம்பிரார்க்கு - நம் சிவ பெருமானுக்கு. குகநாதன் - உபதேசம் செய்த சுவாமிநாதன். செம்பி - ஒருத்தி பெயர். வம்பி - பொல்லாதவள். தனக் குடம் - குடம்போன்ற தனம். கல் வடம் - கல் பதித்த மாலை; கழுத்திலணிவது. கம்பி கட்டிய உடை - கம்பிச் சேலை. பம் பும் - துள்ளுகின்ற. நட்டணை நடை - நாட்டிய நடை. மூத்தன் - ஒரு பள்ளன்.

கரு௦. வட்ட வேலை - சமுத்திரம். கிரவுஞ்சம் - கிரவுஞ்ச மலை. 'மாமயிலோன் வேல்பட்டழிந்தது வேலையுஞ் சூரனும்

சட்டை பண்ணாமற் செய்வ தாரெனப்
பட்ட முடையான் கிட்டப்போய்த்
தலையிலே எட்டிக் குட்டக் கண்டந்தச்
சண்டி குலுங்கச் சிரிக்கிறாள்
கட்டி வெல்லமும் பாலும் போலிவர்
இட்டம் ஆருக்குந் தெரியுமோ
காமன் சேட்டையை உலகி லேளவர்
காண வல்லவர் பள்ளீரே. ௧௫௦

கைவ லாளனைச் சூரனை வென்று
தெய்வ லோகத்தைக் காத்தருள்
கந்த மாதனப் பொருப்பினான் - அருள்
வந்த மானகத் திருப்பினான்
சைவ நாயகன் திருமலை யில்முத்
தையன் ஆறிரு தோளுடைச்
சரவ ணகுகன் பண்ணைப் புரவிற்
குரவை முழக்கி நடச்செய்தே
ஐவர்க் கிளையாள் சுமந்த நாற்றோடுஞ்
செய்வ ரப்பினில் விழுந்தவள்
ஆடை யவிழக் கண்ட சங்கிலி
மாடன் அடுக்க ஓடிப்போய்ப்

---

வெற்பும்' - கந்தரலங்காரம் ௪௦. வண்ண - அழகுடைய. இருளன் - ஒரு பள்ளன். அழகி - ஒரு பள்ளி (௯௩). சட்டை பண்ணாமல் - லட்சியம் பண்ணாமல். பட்டமுடையான் - மற்றொரு பள்ளன். இவர் - இந்தக் காதலர். இட்டம் - இஷ்டம்; அன்பு. காமன் சேட்டை - மன்மதன் திருவிளையாடல்.

௧௫௧. கைவலாளன் - ஆயுத பலம் பொருந்தியவன். கந்தமாதனப் பொருப்பினான் - கந்தமாதன மலையையுடைய முருகன். மான் அகத்து இருப்பினான் - தன் அருளைப்பெற்ற வள்ளி நாயகியின் மனத்திலே உறைபவன். மான் - வள்ளி.

பைவள ரல்குல் கதுவைக் கண்டிது
பாம்படி பள்ளி பாம்புநான்
பார்வை பார்க்கிறேன் என்று தடவிப்
பார்க்கிறான் பாரும் பள்ளீரே. ௧௫௧

மன்னைச் சூரனை இரண்டு படுத்தித்
தன்னைப் போல்தெய்வம் ஆக்கினோன்
வள்ளி நாயகன் திருமலைக்குகன்
வளமைப் புரவில் நடச்செய்தே
சின்னச் சிறுக்கி நன்னி தடித்த
வன்னக் குரும்பை முலையினைத்
திகைத்துப் பார்க்கும் பண்ணைக் காரன்
முகத்தைப் பார்த்து நகைத்திடும்
கன்னங் கறுத்த கறுப்பி யைஅவன்
தின்னச் சினங்கொண் டோடிப்போய்க்
கடுக வேநடச் சொல்லி யேதடிக்
கம்பினை லெட்டி யடிக்கிறான்
முன்னம் போயவள் பள்ளன் இருளன்
முந்தி யைப்பிடித் திழுக்கிறான்
முட்டாள் பயலே விலகு கைமிஞ்ச
விட்டால் மோசம் பள்ளீரே. ௧௫௨

---

சரவண குகன் - சரவணப் பொய்கையிலுதித்த முருகன். ஐவர்க்கிளையாள் : ஒரு பள்ளி.

௧௫௨. மன்னைச் சூரன் - கோபங்கொண்ட சூரன். இரண்டுபடுத்தி - இரண்டாய்ப் பிளந்து. தெய்வம் : மயிலும் சேவலும் ; மயிலை முருகன் தனக்கு வாகனமாகவும் சேவலைக் கொடியாகவும் கொண்டான். நன்னி - ஒரு பள்ளி. வன்ன - அழகுடைய. கறுப்பி - சிரித்த பள்ளியொருத்தி. தின்னச் சினங்கொண்டு - தின்று விடுவது போன்ற கோபம்கொண்டு. முந்தி - முன்றானை.

கட்டருந் தலைச் சதம் பத்தாள்
புத்திர னறுங் கத்தான்
கவுணி யர் குலந் தோற்றி மதுரை
அமண ரைக்கழு வேற்றினேன்
கடுத்து முத்தமிழ்க் கீர னைச் சிறை
யடைத்து விடுத்த குமரவேள்
காவி யஞ்சுனைத் திருமலைக்குகன்
கருஞ்செய்ப் புரவில் நடச்செய்தே
சுட்ட சள்ளையைக் கடித்தொரு குத்தி
முட்டிக் கள்ளையுங் குடித்தவன்
சுற்றிச் சுற்றிக் கக்குறான் - தலை
சுழன்று சுழன்று விழுகிறான்
துட்டங் கொண்டுவண் டுறுக்கிறான் - ஒரு
சட்டி நண்டையும் நொறுக்கிறான்
தொட்டு நாடியைச் சொறிகிறான் - ஒரு
கட்டியை எடுத் தெறிகிறான்
ஓட்டை வீசையைத் திருத்துறான் - நடும்
பள்ளியர் தம்மைத் துரத்துறான்
உடைச்சி முலையைக் கிள்ளுறான் - அவள்
உதட்டிலே முத்தங் கொள்ளுறான்
உருட்டி உருட்டி விழிக்கிறான் - உடல்
புரட்டிப் புரட்டி நெளிக்கிறான்
உள்ளங் கையைப் பிசைகிறான் - பச்
சோந்தி போலிருந் தசைகிறான்

---

கருங. இதன் முதலிரண்டு வரிகளின் வடிவமும் பொருளும் தெளிவுபடவில்லை. சமபந்தர் கவுணியர் குலத்திலே தோன்றியவர். கீரன் - நக்கீரன். சிறைவிடுத்தது, அவர் திருமுருகாற்றுப்படை பாடியதற்கு மகிழ்ந்து (கஉசு). கருஞ்செய்ப் புரவு - கரிசல் மண்ணுடைய வயல். சள்ளை - ஆற்றுமீனில் ஒருவகை. குத்தி - புட்டி அல்லது குடுவை ; ' குத்தியில்

அட்டை யிரண்டு பிணைக்கிறான் - மொட்டை
அழகி மடியில் திணிக்கிறான்
ஆலி முலையும் பூலி முலையும்
அளவு பிடித்துப் பார்க்கிறான்
ஆருக் கிணங்கும் வீரக் குடும்பன்
அறிவ ழிந்திடக் குடித்திடும்
அரக்குச் சேட்டையும் குரக்குச் சேட்டையில்
அதிகம் பாரடி பள்ளீரே. கருங

கலிப்பா

சேவகனே காவித் திருமலையா அன்பருளப்
பாவகனே என்றுமனம் பாவிக்கப் பெற்றேனே
சாவகனே ரிட்டகொடுஞ் சண்டாள வல்வினையால்
ஏவகனே ஆனேன் எடுத்தசென்மம் பொல்லாதே. கருச

---

அரக்குக் கள்ளும்' - குற்றாலக் குறவஞ்சி. முட்டி-சிறுபானை. குடித்தவன் - குடித்த வீரக் குடும்பன் என்ற பள்ளன். துட்டம் - துஷ்டம். வண்டுறுக்கிறான் - உதட்டை மடக்கிக் கடிக்கிறான். ஒட்டை - ஒட்டை யளவுள்ள. திருத்துறான் - முறுக்குகிறான். உடைச்சி, அழகி, ஆலி, பூலி என்போர் பள்ளியர். அரக்குச் சேட்டை - அரக்குச் சாராயம் குடித்ததனாலுண்டான சேட்டை. இது குரங்கின் சேட்டையினும் அதிகமாயிருக்கிறது.

கருச. பாவகன் - பரிசுத்தமானவன்; 'பறவையின் குலங்கள் காக்கும் பாவகன்' - கம்பர். சாவகன் நேரிட்ட - சாவகனை யொத்த; சாவகன் - சனி. ஏவகனே ஆனேன் - அகத்திலே அம்பு தைத்தாற்போலத் துன்புறுபவன் ஆனேன்; ஏ - அம்பு.

## பயிர் விளைதல்

*சிந்து*

இன்னலம் பெறப் பள்ளி யரெலாம்
பண்ணைப் புரவிலே
இதத்துடன் கூடிக் குரவை முழக்கிப்
பதித்த நாற் றெல்லாம்
பன்னிரு செங்கை ஆறு முகனைப்
பரவு.வார் நிலை
படைத்துத் தேறுங் குடும்பம் போற்றலை
எடுத்துத் தே றியே
துன்னு கிளைகொண்டு குலவிப் பயிருமாய்
அரை திரண் டதில்
தொடர்ந்து கணுவைத் தெழுந்து கருக்கொண்
டடர்ந்து பொதியு மாய்
மன்னுங் கதிரை நீட்டிப் பாற்கொண்டே
பின்னுங் கற் புடைய
மாதர் போற்றலை வணங்கிச் சிவந்து
வாய்த்து விளைந் ததே. கருரு

*எண்சீர் விருத்தம்*

கையகலு மனநிலச்சஞ் சிதக்கா டெற்றிக்
கருணைபெறுஞ் சிற்பரையேர் பூட்டிப் பூண்ட
மையகல அருட்கொழுவால் உழுதா னந்த
வாரிவிட்டுச் சிவவிதையை வித்தி நாளும்

கருரு. இன்னலம் - இனிய நன்மைகள். நிலைபடைத்து - நிலையாக வாழ்ந்து ; நன்ருக வேரூன்றி. தேறும் - செழிப்புற் ருேங்கி. கற்புடைய பெண்கள் தலைகுனிந்திருத்தலைப்போல. தலை வணங்கி - கதிரின் கனத்திஞலே சாய்ந்து. அரை திரண்டு-பயிரின் அடித்தாள் பெருத்து. பாற்கொண்டு - கதி ரின் மணியிலே நெல்லுக்குரிய பால் பிடித்து.

கருசா. கையகலும் - எப்போதும் ஓடிக்கொண்டே யிருக்கிற. மன நிலம் - மனமாகிய நிலத்திலே. சஞ்சிதம் -

ஐயனெங்கள் ஆறுமுகக் குருவந் தன்பால்
அனுபூதிப் பயிரிட்டின் பம்விளைத் தாற்போல்.
செய்யில்நடும் நாற்றெல்லாம் கிளைகொண் டோங்கிச்
செம்பவளம் போல்விளைந்து சிறந்த தன்றே. கருசு

## அறுவடை செய்தல்

### சிந்து

செந்நெல் விளைந்த செய்தி பண்ணையான்
முன்ன முரைத் திட்ட
திருமலைப் பள்ளன் நாட்கதிர் கொண்டு
சிரத்துச் சுமந்து போயினன்
அன்ன மென்னடை வள்ளி நாயகன்
திரு மலைவாழ் முத்
தையன் சன்னிதி முன்னம் வைத்துநின்
றனைவருங் கும்பிட்டே
இன்னம் பலம்பெற வயலில் மீண்டுபோய்க்
கூனி ரும்பு கை
எடுத்துக் கதிர்கொய் தரிகள் பரப்பித்
தொடுத்துச் சுமை யாய்

---

பிராரப்தம், ஆகாமியம், சஞ்சிதம் என்ற கன்மம் மூன்றில் ஒன்று; அனுதியாய் ஈட்டப்பட்டுள்ள கன்மத்தில் அனுபவித்துத் தீர்ந்தது போக எஞ்சியது; சஞ்சிதமாகிய காட்டை. எற்றி - வெட்டி யெறிந்து. சிற்பரை - சிற்சத்தியாகிய ஞான சக்தி; ஞானமென்னும் ஏர். மை - கறுப்பு; அஞ்ஞானம் நீங்க. அருளாகிய கொழு; ஆனந்தமாகிய நீரைப் பாய்ச்சி; சிவம் என்னும் விதையை விதைத்து. செய் - வயல். செம்பவளம்போல் என்றது. செந்நெல்லானமையால்..

கருஎ. நாட்கதிர் - நல்ல நாளிலே முதன்முதல் அறுத்த கதிர். கூனிரும்பு - வளைந்த இரும்பாலான அரிவாள். அரிகள் - அரிந்துபோட்ட கதிர்த்தாள்கள்.

மன்னுங் களத்திற் கொணர்ந்து போர்வைத்தே
மற்றை நாள் அந்த
வளமைப் போரைச் சரித்துப் பகட்டின்
பிணையல் பிணைக்கின்றார். க௫எ

பூட்டும் பிணையல்கள் பிடித்துவைக் கோல்களைந்(து)
ஒருமுகப் படப்
பொலியைக் கூட்டி முறத்தி னுற்பதர்
போக வீசியே
கோட்டைங் கரனை முனம்வைத்தே குடும்பன்
பாட்டக் கால்கொண்டு
குடங்கை கட்டி யளந்தம் பாரமாய்க்
குவித்துக் குறியிட்டார்
ஈட்ட மாயுழு தான குடிகட்கே
குடிச்சு தந்திரமும்
ஈந்து பிள்ளையா ரடியும் பேறும்
இனிது கைக்கொண்டான்
சீட்டும் எழுதிப் போட்டு முத்தையன்
வருடப் பூசைக்குச்
சிறந்த ஆயிரத் திரட்டி நெல்வகை
சேரில் கட்டினனே. க௫அ

---

க௫எ. பகட்டின் பிணையல் - எருதுகளின் பிணையல்.

க௫அ. ஒருமுகப்பட-ஒருசேர. பொலி - தூற்றாத நெற் குவியல். பாட்டக்கால் கொண்டு - நெற்குவியலிலே குறுக்காக இருந்துகொண்டு. கோட்டைங்கரனை முனம் வைத்தே - பிள்ளையாருக்கென்று முதல் கோட்டில் சிலவற்றைத் தனியே வைத்து. குடங்கை கட்டியளந்து - உள்ளங்கையைச் சேர்த்து அதிக நெல்லை அளந்து; கட்டி யளத்தல் என்பது வழக்கு. அம்பாரம் - குவியல். குறியிட்டார் - முத்திரையிடுவதுபோல நெற்குவியலுக்கு அடியாளமிட்டார். குடிச் சுதந்திரம் - கண்டுமுதலான நெல்லில் வயலுழுத பண்ணையாட்களுக்கு

## மூத்த பள்ளி சண்டையிடல்

சேரிற் கட்டிய திருமலைக் குடும்பன்
உள்ள பேறும்
திருட்டுப் பேறும் இளையவள் பேர்க்கே
கொடுத்து மூத்தவள்
காரியக் காரி யாக இருந்துமே
பள்ளனுர் வெறுங்
கையைக் காட்ட வெய்ய கோபக்
காரி சீறியே
ஆரும் அறியக் கொண்ட பள்ளனென்றே
நச்சு மரத்தைநான்
ஆணி வேர்விழ மட்டும் வளர்த்து
வீணி யானேனே
பாருமே வைப்புக் கூத்தி யானநன்
னகரப் பள்ளிக்குப்
பங்கிங் கேதென மூத்த பள்ளி
சண்டை பிடிக்கிருள். கருக

---

உரிமையுள்ள பகுதி. பிள்ளையாரடி : பிள்ளையாரடி என்று தனியே வைத்த நெல்லையும் பள்ளன் கைக்கொண்டுவிட்டான். பேறு - பங்கு. ஆயிரத்திரட்டி - இரண்டாயிரம்.

கருக. பள்ளன் தன் நெல் அனைத்தையும் இளையவளுக்கே கொடுக்கிறுன் ; மூத்தவள் தன் பங்கைக் கேட்கிறுள் ; அவன் கையை விரித்துவிடுகிறுன். உடனே அவள் சீறிச் சண்டை பிடிக்கிருள். உள்ள பேறும் திருட்டுப் பேறும் - கிரமமாய்ப் பெற்ற நெல்லும் திருட்டுத்தனமாய்க் கவர்ந்துகொண்ட நெல்லும். கொண்ட - கலியாணம் செய்து கொண்ட. பள்ளனை நச்சு மரம் என்கிருள். பாருமே என்றது, உடன் இருந்த மற்றப் பள்ளிகளை நோக்கி. வைப்புக் கூத்தி : இளையவள்.

## பள்ளியர் ஏசல்

### சிந்து

இ : வைப்புக் கூத்தி யாரடி தென்
பண்பையிற் பள்ளி - நீயுன்
வாய்நினைந்த சொற்சொல் லாதே
வம்பி நானடி

மூ : ஒப்புக் கொப்போ நன்னகரப்
பள்ளி திருட்டால் - உண்ட
ஊறு படைத் தாலெதிர்த்து
வீறு பண்ணுதே. கசூ0

இ : பண்ணைக் கடாப் போற் பருத்த
பண்பையிற் பள்ளி - கொண்ட
பள்ளனுக்கு ரெண்டு செய்யும்
பரத்தை நீயடி

மூ : கண்ணைக் காட்டிக் காசு தண்டும்
நன்னகர்ப் பள்ளி - வண்டக்
காளியுனைப் போலு முண்டோ
கந்தலே போடி. கசூக

---

கசூ0 முதல் கஅங வரை பள்ளியர் இருவரும் ஒருவரை யொருவர் ஏசிக் கொள்ளுகிறுர்கள். ஒவ்வொரு பாட்டிலும், முற் பாதி இளையவள் கூற்று, பிற் பாதி மூத்தவள் கூற்று.

கசூ0. வைப்புக் கூத்தி என்றதைக் கேட்டுக்கொண்டே வந்த இளையவள் சண்டை தொடங்குகிறுள். வாய் நினைந்த சொல் : 'வாய் தந்தன கூறுதியோ' - கம்பர். உண்ட ஊறு - உண்ட மகிழ்ச்சியால் ஏற்பட்ட தினவு.

கசூக. ரெண்டு செய்யும் - துரோகம் செய்கிற. கண்ணைக் காட்டி : பள்ளனை மயக்கி இரண்டாந் தாரமாக வாழ்க்கைப் பட்டவளாதலால் அவளை இவ்வாறு கூறுகிறுள்.

இ : கந்த லென்றாய் நீயோ நானே
பண்பையிற் பள்ளி - உன்னைக்
கண்ட வழி போக லாமோ
குண்டணிக் கள்ளி

மூ : சொந்த மாகக் கொண்ட வனைச்
சொக்குப் பொடியால் - நீயுஞ்
சொன்னபடி ஆட்டி வைத்தாய்
நன்னகர்ப் பள்ளி. ௧௬௨

இ : ஆட்டிப் பேசிக் கொண்ட பள்ளைப்
பண்பையிற் பள்ளி - குட்டை
அடித்தாய் சீலை பாம்பாய்ச் சுற்றிக்
கடித்தது போலே

மூ : மேட்டிக் காரி நன்னகரப்
பள்ளி நீயும் - குட்டை
விடுத்தாய் உன்னைப் போலப் பள்ளி
உலகத்தி லுண்டே. ௧௬௩

இ : உண்ட பேர் வாழ்த் திட வேண்டாம்
நொந்த பேர் திட்டிட வேண்டாம்
உன் புத்தி துர்ப்புத்தி போமோ
பண்பையிற் பள்ளி

---

௧௬௨. குண்டணி - கோள் சொல்பவள். கொண்டவன் - கணவன்.

௧௬௩. மேட்டிக்காரி - அகந்தை யுடையவள், கெட்டிக்காரி. 'சீலை பாம்பாய்ச் சுற்றியது' என்பது பழமொழி. 'நீ குட்டை விடுத்தாய்' என்பதில், விடுவிக்கவில்லை என்ற இகழ்ச்சிக் குறிப்பு.

மு : க்ண்ட பேர்முன் பல்லேக் காட்டி
நீட்டிப் பேசும் - வண்டக்
கன்னக் காரி உன்னைப் போலார்
நன்னகர்ப் பள்ளி. கசுச

இ : பள்ளர் பள்ளி யர்சி ரிக்கும்
ப்ண்ணையிற் பள்ளி - உன்னஞ்ஞைப்
பள்ள னஞ் சானேக் கேளு
கன்னியைக் கேளு

மு : உள்ள தேடி நன்னகர்ப் பள்ளி
பள்ள னிருளன் - விளே
யொட்டு கையைக் கேளு பள்ளன்
பட்டடையைக் கேள். கசுரு

இ : பட்டடை நெற் கள்ளி பண்ணைப்
பள்ளி போடி - சந்திரனைப்
பார்த்து நாய் குரைக்கி லென்ன
பழுது வருமோ

மு : அட்டி பேசும் நன்னகரப்
பள்ளி முதுகிற் - புண்
ணுடையான் போக்கல்லோ கூனி
மேனி மினுக்கும். கசுசு

---

கசுச. கன்னக்காரி - திருட்டுச் செயலுடையவள்.

கசுரு. அஞ்ஞை - அறிவில்லாதவன். பள்ளன் அஞ்சான் - அச்சமில்லாதவனுன உன் நாயகன். கன்னி : தெய்வம். கேளு-நெல் தரும்படி கேள் என்றபடி. இருளன் விளே - இருளன் என்பவன் வயல்; அவ்வயல் கண்டு முதலிலே. ஒட்டு கையை - ஒட்டி அதிகமாய் அளந்த கையை.

கசுசு. அட்டி பேசும் - தடுத்துப் பேசும்.

இ : மேனி மினுக் காய்த் திரியும்
பண்ணைப் பள்ளத்தி - சும்மா
வீணில் மெல்லும் வாயில் அவல்
காணிலென் செய்யார்

மூ : ஊன மும்மா னமும் இல்லா
நன்னகர்ப் பள்ளி - உன்றன்
ஓட்டை வாயை மூடெ டுத்துப்
போட்டி பண்ணுதே. கசுஎ

இ : போட்டி பண்ண வேண்டா மென்ற
பண்ணையிற் பள்ளி - கொல்லும்
புலியேடி நீயென் கண்ணுக்
கெலியடி கள்ளி

மூ : ஓட்டிப் பேசும் நன்னகரப்
பள்ளி தள்ளிப்போ - நீயும்
உன்நாயன் என்நாயன் என்றென்
முன்னம் பேசாதே. கசுஅ

இ : சாடி சொல்லும் பண்ணைப் பள்ளி
உன்நாயன் போலே - நீயுன்
தகப்பன் சாமிக் குணமென்றன்
முகத்திற் காட்டாதே

கசுஎ. ஊனம் - குறைவு ; எந்தக் குறைவையும் நீ லட்சியம் பண்ணமாட்டாய்.

கசுஅ. புலியேடி - புலி என்று எண்ணிக்கொண்டாய் ? ஓட்டி - அதிகமாக. நாயன் - தலைவன்.

கசுகூ. இதுவரை பள்ளிகளிருவரும் தங்களையே ஏசி வந்தது போக, இப்போது அவரவர் தெய்வங்களைச் சுட்டி ஏசத் தொடங்குகிறார்கள். மூத்தவளுக்குத் தெய்வம் முருகன் ; இளையவள் தெய்வம் குற்றால நாதனான சிவபிரான். பாட்டின் முற்பாதியிலே இளையவள் முருகனைப் பழிக்க, பிற்பாதியிலே மூத்தவள் சிவபிரானைப் பழிக்கிறாள்.

மு : போடிபோ நன்னகர்ப் பள்ளி
உன்நாயன் போலே - சீலை
போட்டா டாதே காப்புக் கையை
நீட்டிப் பேசாதே. கசுகூ

இ : பேச்சிபோ பண்பையிற் பள்ளி
உன்நாய னேய்க்குங் - குறப்
பெண்ணென் றென்னை எண்ண வேண்டாம்
எண்ணிப் பேசடி

மு : ஆச்சடி நன் னகர்ப் பள்ளி
தாரு காவனத் - துங்கள்
அண்ணல் கொள்ளச் சீலை போட்ட
பெண்ணென் றெண்ணுதே. களO

---

கசுகூ. சாடி-கோள். நாயன்-தலைவனான திருமலை முருகன். தகப்பன் சாமிக்குணம் : முருகன் தன் தந்தையான சிவபெருமானுக்கே பிரணவத்தின் பொருளை உபதேசித்தான் என்பது பற்றி, அவனைத் 'தகப்பன் சாமி' என்று சொல்வது வழக்கு. சீலை போட்டு ஆடாதே : திரைச் சீலைக்குப் பின்னும் நடராசப் பெருமான் நடனமாடிக் கொண்டிருப்பதைக் குறித்துச் சொல்லுகிறுள் ; சீலையை எடுத்துப் போட்டுவிட்டு ஆடாதே என்றும் பொருள்படும்.

களO. பேச்சி - பேய்ச்சி. குறப்பெண் - வள்ளியம்மை. ஆச்சு - ஆயிற்று. பிக்ஷாடனக் கோலத்தோடு சிவபிரான் தாருகா வனத்தில் பிச்சை எடுத்தபோது, முனி பத்தினிகள் பிச்சையிட வந்து, அவருடைய அழகில் ஈடுபட்டுக் கலைசோர நின்ருர்கள் என்ற புராண வரலாற்றைக் குறிப்பிடுகிருள். அண்ணல் - சிவபிரான். சீலை போட்ட - காதல் காரணமாகச் சீலையை யிழந்த.

இ : ஆமடி பண்ணைபயிற் பள்ளி
உன்நாயனோது விக்கும்
அண்ணாவியைக் குட்டுந் தொழில்
பண்ணாதே போடி

மூ : ஓமடி நன் னகர்ப் பள்ளி
மாமன் தலையை - முன்னாள்
உன்நாயன் அறுத்தகுணம்
என்முன் பண்ணாதே. கள்க

இ : மன்னிப் பேன் பண்ணைபயிற் பள்ளி
உன்நாயன் முன்னாள் - ஏற
மயில்குஞ்சு பிடிக்குங் கள்ளப்
பயில் பண்ணாதே

மூ : என்னடி நன்னகர்ப் பள்ளி
உன்நாயன் ஆட்டை - முன்னம்
எடுத்து மாறன் அடிக்கப் பட்ட
குணத்தைக் காட்டாதே. கள௨

---

களக. ஓதுவிக்கும் அண்ணாவி - ஓதுவித்த ஆசிரியனான பிரமன். பிரணவப் பொருளறியாத பிரமனை முருகன் குட்டிச் சிறையிலிட்ட வரலாறு. ஓம் - ஆம். மாமன் - தக்கன். தக்கன் யாகத்திலே, தன் மகள் தாட்சாயணியின் கணவன் தானே என்று சிவபிரானை எண்ணி அவருக்கு இடந்தராதபடி அவமதித்தபோது, சிவபிரான் வீரபத்திரரைத் தோற்றுவித்து, தக்கன் சிரத்தைக் கொய்தார் என்ற கதை.

கள௨. மயில் குஞ்சு - மயிலாகிய வாகனம். பயில் - கள்ளத்தனம், குழூஉக்குறி (௨௦); 'அடுத்த பயில்பலவும் பேசி' - ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை. ஆட்டை - விளையாட்டை ; மதுரையிலே வந்தியின் பிட்டுக்காக மண்சுமந்து வைகைக்கரை யடைக்கவந்து, சிவபிரான், கரையடைக்காமல் விளையாடியபோது, பாண்டியன் பிரம்பால் அடிபட்ட வரலாறு; நடனமாடலை என்றும் பொருள். மாறன் - பாண்டியன்.

இ : கொள்ளித் தேளே பண்ணையிற் பள்ளி
உன் நாயனைப்போற் - காட்டிற்
குறத்திக் காக வேங்கை யான
குடிலம் பண்ணுதே

மூ : கள்ளத்தி நன்னகர்ப் பள்ளி
உன்நாயன் போல - வேடன்
கண்ணைப் பிடுங்க அழுது நின்ற
களவு பேசாதே. களந

இ : கூந்தலே பண்ணையிற் பள்ளி
உன்நாயன் போல - நீயுங்
கடுத்துப் பேசும் பேச்சைச் சற்றே
எடுத்து விடடி

மூ : பந்தமுறப் பேசா தேநன்
னகரப் பள்ளத்தி - சாவும்
பஞ்சமே உன் நாயனைப்போல்
நஞ்சு தின்னடி. களச

---

களந. வேங்கை - வேங்கைமரம் ; வள்ளியோடு முருகன் உரையாடிக்கொண்டு நிற்கையில், அவளுடைய தந்தை முதலாயினோர் வரக்கண்டு முருகன் வேங்கைமரமாக மாறிய கதை. குடிலம் - தந்திரம். வேடன் - கண்ணப்பர். கண்ணப்பருடைய அன்பைச் சிவகோசரியார் என்ற அர்ச்சகருக்குக் காட்ட எண்ணி, காளத்திமலையில் சிவபெருமான் தம் கண்ணில் உதிரத்தைப் பெருக்க, கண்ணப்பர் தம் கண்ணிடந்து அப்பிய வரலாறு. அழுது - கண்ணிலே இரத்தஞ் சொரியவிட்டு.

களச. கந்தலே - பயனற்றவளே என்பது கருத்து. கடுத்து - கோபமாக. பஞ்சமே - பஞ்சமில்லை என்பது குறிப்பு. நஞ்சு : சிவபெருமான் பாற்கடலிலிருந்தெழுந்த ஆலகால விடத்தையுண்ட வரலாறு.

இ : கேடி பண்ணைப் பள்ளி வள்ளி
முன்னம் உன்நாயன் - செல்லுங்
கிழட்டுருவம் வந்தாற் புத்தி
மடித்துப் போமோடி

மூ : மோடியாய்த் தாருகா வனத்
துன்நாயன் கூட்டிப்போனுஞ் - சித்ர
மோகினி நீ யானால் தேடி
முடிந்து கொள்ளடி. கஎ௫

இ : கூறிடப் பண்ணையிற் பள்ளி
உன்நாயன் பிடிக்கும் - நீருள்
கொக்கல்ல என் நாயன் வெள்ளிக்
குன்றம் நானடி

---

கஎ௫. கேடி - கேடு உடையவள். கிழட்டுருவம் - மூத்தவள் வயதானவள் என்பதை இளையவள் குறிப்பிடுகிறாள். முருகன் முதிய வேடத்தோடு வள்ளி முன் தோன்றிய கதை. மோடியாய் - கம்பீரமாக. சித்ரமோகினி - அழகுடைய மோகினி ; திருமால் மோகினி வடிவெடுத்துச் சிவபிரானோடு சென்று முனிவர்களை மயக்கினார். தேடி முடிந்து கொள் என்பது, பள்ளனை இளையவள் வசப்படுத்திக் கொண்டாள் என்ற கோபத்தில்.

கஎ௬. கூறிட - சொல்வதற்கு என்றும், இரண்டு கூறுகப் பிளக்க என்றும் இருபொருள். நீருள் - கடலிலே தோன்றிய. கொக்கு - இங்கே மாமரம். முருகனை எதிர்த்த சூரபதுமன், பலவேறு வடிவங்களை எடுத்துக் கடைசியில் மாமரமாக மாறிக் கடலுக்குள் ஒளித்தான். முருகன் அதை இருகூறுகப் பிளந்தான் ; ' சலம் பிளந்து எற்றிப் பொருசூரத் தடம் பெருங் கொக்கைத் தொடர்ந்துடன் புக்குத் தடிந்திடும் சொக்கப் பெருமாள் ' - திருப்புகழ், உ௬௧. வெள்ளிக் குன்றம் - சிவபிரானுக்குரிய வெள்ளிமலை.

மூ : வீறுடன் நன்னகர்ப் பள்ளி
உன்னுடைய நாயன் - வலை
வீச்சிற் பட்ட மீனல்ல நான்
பூச்சை யாமடி. களசு

இ : சண்டி பண்ணைப் பள்ளி போடி
உன்னுடைய நாயன் - முலைத்
தாயர் ஆறு பேர்போல் தீயாய்
நீவழங் காதே

மூ : நண்டு தின்னும் நன்னகரப்
பள்ளி உன்நாயன் - மெல்ல
நகைக்கும் புகைத் தழல்போல் நீயும்
பகைத்தென் செய்வாய். களஎ

இ : கூதறைப் பண்ணைப் பள்ளியுன்
நாயன் கள்ளமாய் - அம்மை
கொண்டைக் குள்வண் டாயிருந்த
குழல் காட் டாதே

---

களசு. வலை வீச்சு - சிவபிரான் ஒரு காரணத்தை முன்னிட்டு வலைஞர் குலத்திலே பிறந்த உமாதேவியாரைத் திருமணம் செய்யவேண்டி, மதுரையில் வலைஞராக வந்து கடலில் வலை வீசிய வரலாறு ; திருவிளையாடற் புராணம், வலை வீசிய படலம். பூச்சை - பூசை ; பூனை. மீனைத் தின்றுவிடும் என்ற குறிப்பு.

களஎ. தாயர் ஆறுபேர் - கார்த்திகைப் பெண்கள் அறுவர். தீயாய் வழங்காதே - தீயொத்த கொடுமையோடு பேசாதே. நண்டு தின்னி - நண்டு தின்பவள். நகைக்கும் புகைத் தழல் :- சிவபெருமான் திரிபுரங்களைத் தாம் நகைத்தே தழலாக்கிய வரலாறு.

களஅ. கூதறை - இழிவானவள் 'மாண்ட மனமுடையர் ஆகாத கூதறைகள்' - பழமொழி நானூறு. அம்மை-

மு : ஏதடி நன்னகர்ப் பள்ளி
வண்டோ தரியை - உங்கள்
ஈசன் போய் மருவுங் கள்ளப்
பூசல் பண்ணுதே. கஎஅ,

இ : பண்ணைப் பள்ளி நீயு மொரு
செட்டி யடியாள் - தெய்வப்
பாண்டியன் அடியாள் நானும்
பயப்படு வேனோ

மு : தின்பதற்குப் பிச்சை கொள்ளும்
ஆண்டி யடிமை - நீயும்
தெய்வ ராயன் அடிமை என்னைச்
சீறியென் செய்வாய். கஎகூ

---

வள்ளியம்மை. வண்டோதரியை மருவும் கள்ளப்பூசல்: 'தென்னிலங்கை அழகமர் வண்டோதரிக்குப், பேரருள் இன்பமளித்த பெருந்துறை மேய பிரான்' - திருவாசகம், ௩சகூ. வண்டோதரி - இராவணன் தேவியும் சிவபக்தி மிக்கவளுமான மண்டோதரி.

கஎகூ. செட்டி - முருகன். பாண்டியன் - சோமசுந்தரக் கடவுளே மதுரையில் சுந்தரபாண்டியனாக வந்து அரசு புரிந்தமையால், குற்றாலநாதனைப் பாண்டியன் என்கிறாள். செட்டிக்குப் பாண்டியன் மேலானவன் ஆதலினாலே, அவனடியாளான நான் பயப்படமாட்டேன் என்கிறாள். ஆண்டி - பிக்ஷாடனரான சிவபிரான். தெய்வராயன் - தேவசேனாதிபதியான முருகன் ; தெய்வங்களுக்கெல்லாம் அரசன் ; 'செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள' - குமரகுருபரர் வாக்கு.

இ : வாய்வீண் பேச வேண்டாம் பண்ணைப்
பள்ளி உன்நாயன் - முன்னாள்
மலையை யரிந் தாற்போல் மூக்கும்
முலையும் அரிவேன்

மூ : நாயனைய நன்னகர்ப் பள்ளி
அன்று காலனை - உங்கள்
நாய னுதைத் தாற்போ லுன்றன்
வாயி லுதைப்பேன். கஅ೦

இ : நல்லது பண்ணையிற் பள்ளி
என்நாயனை ஒப்பாய்ச் - சொல்லும்
நாக்கிலே சுண் ணும்புக்குறி
தாக்கு வேனடி

மூ : அல்லடி நன்னகர்ப் பள்ளி
நீயுஞ் சொல்லாதே - சொன்னுல்கை
அரிவாளால் உன் நாக்கை
அரிந்து போடுவேன். கஅக

இ : பண்ணைப் பள்ளி சொல்ல வாடி
நாயன் பேர்சொல்லல் - பொல்லாப்
பள்ளச் சாதிக் கியல் பல்ல
தள்ளிப் போ போடி

---

கஅ೦. மலையை அரிந்தாற்போல் - முருகன் கிரவுஞ்சகிரியைப் பிளந்ததுபோல. மூக்கும் முலையும் என்றது, சூர்ப்பனகையை இலக்குவன் தண்டித்ததை நினைவூட்டுகிறது. காலன் - யமன். உதைத்தது, மார்க்கண்டனுக்காகத் திருக்கடையூரில்.

கஅக. பழிக்கும் வகைகளெல்லாந் தீர்ந்துபோகவும், இருவரும் நேருக்கு நேரே வைதுகொள்ளுகிருர்கள்.

கஅஉ. நாயன் பேர் சொல்லல் இயல்பல்ல - பண்ணைக்குரியவனுன முருகன் பெயரைச் சொல்வது முறையன்று.

மூ : பின்பு முன்பெண் ணுமைற் பேசும்
நன்னகர்ப் பள்ளி - நாயன்
பேரைநீ யல்லோமுன் சொன்னாய்
பேச்சிபோ போடி. கஅஉ

இ : சாதிப் புத்தி நாயனை நாம்
வேறு படவே - சொன்னால்
தந்தைக்கும் தந்தை மகற்கும்
நிந்தனை யுண்டோ

மூ : பேதமாகச் சொன்ன பேர்க்கே
தோச மல்லாமல் - அண்டம்
பேரு கினும் பேதி யாத
சோதிக் கென்னடி. கஅங

சமாதானமாதல்

இ : பெருமையாய்த் தங்கச்சி யென்றெண்
ணுமைற் பேசினாய் - நீயும்
பெற்ற பிள்ளை யானால் சொல்லப்
புத்தி வருமே

மூ : அருமையான தாய்த்துணை யல்லோ
துணையென்றே - நீயும்
அன்பு வைத்தாற் சண்டையுண்டோ
தங்கைப் பள்ளத்தி. கஅச

---

கஅங. நாயனை - நாயகரான முருகனையோ சிவபிரானையோ. தந்தை, தந்தை மகன் - சிவனும் முருகனும். பேதமாக - வேறுபாடாகக் கருதி. தோசம் - தோஷம். அண்டம் பேருகினும் - பிரளயமே வந்து அண்டங்கள் யாவும் அழிந்தாலும். பேதியாத-சலிக்காத, அழிவற்ற. சோதி-பரம்பொருள்.

கஅச. ஏசி முடிந்து, இருவரும் சமாதானத்துக்கான பேச்சுப் பேசுகிறார்கள்.

போன தெல்லாம் போகட்டும்
நாமிரு பேரும் - பள்ளன்
புத்திக் குள்ளாய் வாழ்ந்தி ருப்போம்
சித்திர மாக

வீரனவர் தொழுங் குற்ருலர்
திருமலை வேலர் - பதம்
வணங்கி வாழ்வோம் நாமிருபேர்
இணங்கி நாளுமே. கஅரு

## வாழ்த்து

### நேரிசை வெண்பா

வாழிதிருக் குற்ருலர் வாழி திருமலையான்
வாழியடி யாருலகம் வாழியவே - வாழியிந்தச்
செந்தமிழைக் கற்ருேர் செவியாரக் கேட்கின்ருேர்
சந்ததமும் வாழி தழைத்து. கஅசா

---

கஅரு. இப்பாடல், பள்ளியர் இருவரும் சேர்ந்து கூறுவது. சித்திரமாக - அழகாக ; சச்சரவின்றி. இணங்கி - அன்பு கொண்டு கூடி.

கஅசா. சந்ததமும் - எப்போதும்.

இப்பாடலின் இறுதியிலே, 'திருமலையதிபர்பேரில் பள்ளு முகிந்தது ; இஃது பெரியவன் கவிராயர் அருளியது' என்ற குறிப்புக் காணப்படுகிறது.

முற்றும்



# பழமொழி அகராதி

[எண் - பாட்டெண்]

அச்சமே கீழ்ச்சாதிக் காசாரம் ௧௦௩

அரக்குச் சேட்டையும் குரக்குச் சேட்டையில் அதிகம் ௧௫௩

அலையிட்ட துரும்பாய் மெலிதல் ௨

ஆனையைக் கொப்பத்தடைத்தாப்போல் அடைத்தல் ௧௦௪

இஞ்சி தின்ற குரங்கொத்தவர் ௭௧

இரண்டிலொன்று கண்டாலன்றிப் போகான் ௯௧

இரண்டுடல் உயிரொன்று ௧௪

இருப்பு விலங்கிட்ட யானையைப் போர்க்களத் தேவுவர் ௧௨௮

ஈமிதித்து முடமாமோ ௧௧௩

உண்ட சோற்றுக்குரெண்டு செய்தால் அதுவே சுடுந்தீ ௮௭

எள்ளுமப்படி பள்ளுமப்படி ௭௮

ஏரும் பூசலு மாகத் திரிதல் ௧௧௯

ஓட்டகம் இவரால் நல்ல கட்டழகு பெற்றது ௭௦

கச்சக்காய்ப் போசனம் கத்தூரியானதுபோல ௧௦௩

கசப்பு வாயில் இனித்திடுமோ ௧௧௭

கட்டி வெல்லமும் பாலும் போல் இவர் இட்டம் ௧௫௦

கண்ணகைபோல் பெண்ணுருவாய் வந்தாள் ௧௧௦

கண்ணை மூடிக்கொண்டு எண்ணாமல காடும்மேடும் பகர்தல் ௯௩

கள்ளினாசையும் பெண்கள் காதலாசையும் ஆகாது ௧௧௮

கற்புடைய மாதர் போற்றலை வணங்கி ௧௫௫

காட்டிற் கூழை நரியைக் குளிப்பாட்ட வல்லாய் ௮௭

காமன் சேட்டையை உலகிலே எவர் காண வல்லவர் ௧௫௦

காலஞ் செய்வது கோலஞ் செய்யாதே ௧௨௨

கிழட்டுருவம் வந்தாற் புத்தியடித்துப்போமோ ௧௭௫

கீறுங் கீற்றொரு நாளுங் கடவேன் ௧௨௨

ஞூணத்தினுக் கவுழ்சதங் கொடுத்திடலாமோ கஉரு
குதிரையைக்கும்பிட்டேறிச் சவுக்கால் அடிப்பது போல் கககச
குனி சிலே வணக்கம் என இவன் இணக்கம் எஅ
கெண்டைக்காய்க் குளத்தை வெட்ட வல்லான் ககஉ
கொட்டாமலே பிள்ளேப் பூச்சி ஆயினேன் அஎ
கொல்லிமலேப் பாவை குணம் படித்தாள் கக०
சந்திரனைப் பார்த்து நாய் குரைக்கிலென்ன பழுது வரும் ககூசு
சீலே பாம்பாய்ச் சுற்றிக் கடித்ததுபோல ககூரு
சீலே போட்டாடாதே ககூகூ
சுமக்கிற எருதுக்குத் துள்ள வுங் கடனே கஉரு
செருப்புக் காலிற் கடித்தது போல கஉக
தகப்பன்சாமிக் குணம் காட் டாதே ககூகூ
தஞ்சாவூர்ச் சாலமெங்கே படித்தாய் அஎ
தட்டானுறவுபோல் வந்துற வாடினுள் அஎ
தலேயோட்டில் எழுத்தினே யாரழிப்பார் அக
தாமுண்ணுஞ் சோற்றில் நஞ்சு கலப்பவர் ஒருத்தரு மில்லே கஉகூ
தாலிக்கு வேலி சச
தீயிற் பயிரிட்டாற் கதி ராய்க் காணுமோ அகூ
துயரக் கடலுக்கு அம்பி யானவன் கசகூ
தூற்றும் பெண்டிர் கூற்று என ககக
தோளிலிருந்து செவிதனேக் கடித்தாள் கக०
நச்சு மரத்தை ஆணி வேர் விழுமட்டும் வளர்த்து வீணியானேன் கருகூ
நம்பி நச்சு மரத்தை நட் டாய் ககக
நரி ஈடாடி முன்னம் எதிர்த் தால் அது சிங்கம் க०எ
நாய் வாயிற் கோலே நீட்டி விடல் கககச
நாலுபேர் சிரிக்க ககக
நாவிலே ஒன்று நெஞ்சி னிலே ஒன்று கககூ
நாளஞ்சு பிடித்திடும் சொல்ல அ०
பச்சைப் புளியாக்கித் தின்ன வேண்டாம் கூ०
பட்சாதிக்கு அடியன்றிச் செம்மை அடுக்குமோ கூ०
பட்டால் அன்றி அறியான் க०ச

பதரொடும் இனிதாத நெல் விலைப்படும் ச
பள்ளர் சேரச் சிரிக்க உடம்புபடைத்தாய் கக அ
பார்த்தாற் பசுப்போல் இருக்கிறீர் க ௦ சு
பால் இருக்க வேம் பருந்தி எ எ
பால் மெத்தக் கறப்பினும் வாழும் வீட்டினைத் தினம் பொறுப்பாரோ எ கூ
பிறவாப் பிள்ளையை நிணவாக் கட்டிலேற்றில் கிடக்குமோ அ கூ
பிறவிக் குருட்டுடன் இளநீரின் குழம்பிடவோ க உ ரு
புலிவாலுருவி விட்டால் வரும் மோசம் க ௦ ச
பூனை புலியாய்ச் செய்தான் க ௦ ச
மயிலைக் கெஞ்சி யொரு தூவற் கேட்டாற் கொடுக்குமோ கூ ௦
மழைக் குபசரித்து எவர் பெயச் சொல்லுவார் க உ ரு
மீனுக்கு வாலும் பாம்புக்குத் தலையையுங் காட்டி க க கூ
முதுகிற் புண்ணுடையான் போக்கல்லோ கூனிமேனி மினுக்கு க சு சு
முள்ளைக்கூரிய முள்கொண்டெடுப்பார் க க ரு
ருத்திராக்கப் பூனை அ அ
வாச்சிக்கல்லாதுமரக்கணுத் தீராது அ அ
விளையும் பயிர் முளையில் தெரியும் க ச க
வீணில் மெல்லும் வாயில் அவல் காணில் என் செய்யார் க சு எ
வேலைக்கு மலைத்திடுந் தோஷளான் க உ ரு

# அரும்பொருள் அகராதி

[எண் - பாட்டெண்]

# பாட்டு முதற்குறிப்பகராதி

[எண் - பாட்டெண்]